ॐ

# ॥ मनीषापञ्चकम् ॥

# மநீஷாபஞ்சகம்

சாஸ்த்ர ரத்னாகரம் ப்ரஹ்மஸ்ரீ தேதியூர்
ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரிகளின் விளக்க உரையுடன்





ஸ்ரீமத் ஆதிசங்கர பகவத்பாதாளவர்கள் அருளிய

# ॥ मनीषापञ्चकम् ॥

# மநீஷாபஞ்சகம்


சாஸ்த்ர ரத்னாகரம் ப்ரஹ்மஸ்ரீ தேதியூர்
ஸுப்ரஹ்மண்ய சாஸ்த்ரிகளவர்களின்
விரிவான தமிழ் விளக்க உரையுடன்



பதிப்பாளர்
ஸ்ரீ சங்கர குருகுலம்
அபிராமபுரம், சென்னை 600 018
2007

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | 1920 |
| இரண்டாம் பதிப்பு | : | 1936 |
| மூன்றாம் பதிப்பு | : | 1950 |
| நான்காம் பதிப்பு | : | 2007 |



வெளியிட்டோர்

ஸ்ரீ சங்கர குருகுலம்
அபிராமபுரம்,
சென்னை 600 018

விலை ரூ. 70.00

ஒளி அச்சு : செங்கமலம் எண்டர்பிரைசஸ், சென்னை 600 004
அச்சிட்டோர் : ஸ்ரீ ஜெய்கணேஷ் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை 600 004



# நான்காவது பதிப்பின் முன்னுரை

"ச்ருதி, ஸ்ம்ருதி, புராணங்கள் போன்ற எல்லா நூல்களுக்கும் ஆலயம்" என்று கூறப்படும் நமது ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யாள் அவர்கள் மிகவும் கருணைக்கு இருப்பிடமான மகாஸமுத்ரம் என்பதனால்தான் பல பல வேதாந்த நூல்கள் - ஸூத்ரபாஷ்யம், உபநிஷத்பாஷ்யம், கீதாபாஷ்யம், ப்ரகரணக்ரந்தங்கள், ஸ்தோத்ரங்கள் - செய்து, பிறகும் "ப்ரஹ்மாத்மைக்யம்" என்ற பரமலக்ஷ்யத்தை நம்மால் அந்நூல்களைப் படிப்பதால் உடனடியாக பெற முடியாது என்று கருதினது போல் - ஸ்ரீபகவத் பாதாள் தனது ஐக்யானுபவத்தை மற்றவர் ஸமாதி போன்ற அனுஷ்டானமின்றியே அறியும்படி இந்த ஐந்து ச்லோகங்களைக் கூறியுள்ளார். இத்தகைய ஸர்வவேதாந்தானுபவஸாரமாக இந்த மனீஷா பஞ்சகம் இருப்பதாக ப்ரஹ்மஸ்ரீ தேதியூர் சாஸ்திர ரத்னாகரம் சாஸ்திரிகள் கூறுகிறார். (P. 19) "சிஷ்யர்களோ மற்றவர்களோ ஸமாதியாகிற ஸாதனமின்றியே அறியும்படி ப்ரகாசப்படுத்தக்கூடிய ஐந்து ச்லோகங்களால் தன் அனுபவத்தை .... தெரியப்படுத்தி"

இந்த நூலில் ஸ்ரீசாஸ்திரிகள் மிகவும் விஸ்தாரமாக விளக்கங்களை சுலபமான உதாரணங்களுடனும், யோக வாஸிஷ்டத்தின் உபாக்யானங்களை மேற்காட்டி தெளிவு படுத்தியிருப்பது தனிச் சிறப்பாகும். மேலும் சுலபமான பதவுரையும் இருப்பது படிப்போர்களுக்கு ஆனந்தத்தைத் தருகிறது.

ஆசை (காமம்) தான் ஸர்வ கஷ்டங்களுக்கும் காரணம் என்பதையும் பரமவைராக்யம்தான் மோக்ஷஸாதனம் என்

பதையும் (P. 58ல்)கூறியுள்ள சிறு ச்லோக வ்யாக்யான மூலம் ரொம்பவும், யாவர்க்கும் மனதில் படுமாறு விளக்கியுள்ளது சாஸ்திரிகளின் தனிச்சிறப்பாகும். (நேபாள தேசத்தின் வித்யா நிதியின் கதை) இக்கதையைப் பலமுறை படித்தால் நாம் அனைவரும் நம் நிலையை உணர்ந்து வைராக்யம் பெறலாம்.

தேஹம் ஆத்மாவாகாது, தேஹஸம்பந்தம் சற்றும் நமக்கு இல்லை என்பதையும் கோர்ட்கேஸ், ஜட்ஜ்மெண்ட் மூலம் கூறியுள்ள விதம் (P 74-80) படித்தே ரஸிக்க முடியும், வியக்க முடியும்.

(இத்தகைய இந்த நூலை 1950-ல் மூன்றாம் பதிப் பானதை 57 வருஷங்கள் பிறகு இம்முறை மறுபடி வெளி யிடப்படுகிறது) இப்புத்தகம் மிகவும் முமுக்ஷுக்களுக்கு உபகாரமாயுள்ளது. இதனை யாவரும் பெற்று படித்து ஸ்வானுபவம் ஏற்பட முயல வேண்டும்.

மைலாப்பூர்
2.2.2007

"வேதபாஷ்யரத்னம்" "தர்சன கலாநிதி"
"அத்வைத ஸித்திரத்னாகர"
"வேதாந்த மீமாம்ஸா சிரோமணி"
முல்லை வாசல்
**Dr. R. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்**
முன்னாள் தலைவர், ஸம்ஸ்க்ருதக் கல்லூரி, மைலாப்பூர் சென்னை

# இரண்டாம் பதிப்பு முன்னுரை

ஆஸ்திகசிகாமணிகளே, இஹத்திலும் பரத்திலும் ச்ரேயஸ்ஸை அடைவதற்கு வைதிக மதத்தைத் தான் கைக்கொள்ளவேண்டும். அந்த மதமோ **த்வைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம்** என்று வேதத்தின் உத்தர பாகத்தில் மூன்று ப்ரகாரமாகவும், அது போலவே வேதத்தின் பூர்வபாகத்தில் **மீமாம்ஸா** என்ற ஒரே ப்ரகாரமாகவும் பிரிக்கப்பட்டிருக்கிறது. பூர்வ பாகத்திலுள்ள தர்ம மீமாம்ஸையை ஸத்குரு முகமாக நிவ்ருத்தி செய்து கொண்டபிற்பாடு, அந்த **மீமாம்ஸா** என்ற விசாரத்திற்கு விஷயமான தர்மங்களையும், அதிலும் **காம்யம், ப்ரதிஷித்தம், நித்யம், நைமித்திகம்** என்று பிரிக்கப்பட்டிருப்பதால் காம்யத்தையும், ப்ரதிஷித்தத்தையும் ஸ்வரூபேணத்யாகம் செய்துவிட்டு, நித்யத்தையும், நைமித்திகத்தையும் பலாபிஸந்தி இல்லாமலும், நான் கர்த்தா என்ற அஹங்காரம் இல்லாமலும், ''यज्ञार्थात् कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबन्धनः'' ३.९ என்ற பகவத்கீதா வசனத்தை அநுஸரித்து பரமேச்வரனிடத்தில் அர்ப்பணம் செய்து அனுஷ்டிக்கவேண்டும்.

அவ்விதம் அனுஷ்டிக்கப்பட்ட ஸத்கர்மாவானது மனதிலுள்ள மலத்தைப்போக்கி வேதத்தின் உத்தர பாகத்திலுள்ள தத்வங்களை விசாரிப்பதில் தீவ்ரமான ஆவலை உண்டு பண்ணிவிடும். உடன் குரு முகமாக தத்வவிசாரம் செய்கிறவனாக மனித ஜந்மா எடுத்தவன் ஆகிவிடுகிறான். வேதத்தின் உத்தர பாகத்திலோ, ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தால் ஸித்தமான அர்த்தத்தை அநுவாதம் செய்கிற பாகங்கள் சிலதுகளும், ப்ரத்யக்ஷத்தால் கண்டுபிடிக்கக் கூடாததான அபூர்வமான தத்வங்களை போதிக்கிற பாகங்கள் சிலதுகளாகவும் காணப்படுகின்றன. அதாவது, ஜீவன், ஜகத், இந்த இரண்டுகளுக்கும் பரப்ரம்மத்திற்கும் நியம்ய, நியாமக பாவத்தை மாத்திரம் போதிக்கிற பாகங்கள் **த்வைதம்** என்று சொல்லப்படும். ஜீவனுக்கும், ஜகத்துக்கும், பரப்ரம்மத்திற்கும் நியம்ய, நியாமக பாவத்தை போதிப்பதோடு கூட, சரீர, சரீரி பாவ ஸம்பந்தத்தையும் போதிக்கிற பாகம் **விசிஷ்டாத்வைதம்** என்று சொல்லப்படும். ஜீவனுக்கும், ஜகத்துக்கும் பரப்ரம்மத்தைக் காட்டிலும் வேறு **ஸத்தையே**

*(உயிர்)* இல்லை என்று சொல்கிற பாகம் அத்வைதம் என்று சொல்லப்படும். த்வைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் என்பதே மோக்ஷம் என்ற மஹாஸௌதத்திற்கு *(மாடி)* படிக்கட்டு களாக ஏற்பட்டிருக்கின்றன.

ஒரு மனிதனுக்கு மந்தமான இருளில் பழுதையைப் பார்க்கும்போது பாம்புபோல் தோன்றுகிறது. முதல் படியில் அந்தப் பாம்பும் அவனுக்கு ஸத்யமாகத்தான் தோன்றுகிறது. பிறகு தத்வ விசாரம் செய்தால், ஸத்யமான பழுதையை ஸம்பந்தித்திருப்பதினால், பாம்பு ஸத்யமாகத் தோன்றியது. பாம்பு ஸ்வயமாகவே ஸத்யம் அல்ல என்று ஸித்திக்கிறது. மறுபடியும் விசாரித்தால் பழுதைக்கு வேறான பாம்பும் இல்லை, பழுதையுடன் ஸம்பந்தித்த பாம்பும் இல்லை. அங்கிருந்து பழுதையே என்பது விளங்குகிறது.

பழுதையைப்போல் பாம்பும் ஸத்யமென்பது த்வைத ஸித்தாந்தத்திற்கு உதாஹரணமாகும். ப்ரம்மத்தைப் போலல்லவா ஜகத்தும் ஸத்யமென்று அவர்கள் சொல்கிறார்கள்.

பழுதையைப் போல் பாம்பு ஸத்யமென்று சொல்ல முடியாது. பழுதை மற்றொன்றை அபேக்ஷிக்காமலே ஸத்யமாக ஆகிறது. பாம்போ பழுதையை ஆச்ரயித்துத்தான் ஸத்யமாகிறது. இது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு உதாஹரணமாகும். இந்த ஜகத்தையும் ஜீவனையும் பகவானுக்கு சரீரமாக வல்லவா ஒப்புக்கொண்டு இந்த இரண்டுகளையும் ஸத்யமென்று சொல்கிறார்கள்.

பழுதைதான் ஸத்யம் வேறொன்றுமே இல்லை என்பது அத்வைத ஸித்தாந்தத்திற்கு உதாஹரணம் ஆகும். ப்ரம்மம் ஒன்று தான், ஸத்யம் மற்றொன்றுமே இல்லை என்றல்லவா அவர்கள் சொல்கிறார்கள்.

ஆகையால் த்வைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் என்றது மூன்றும் உபாய உபேய பாவத்தை அடைந்திருப்பதால், முமுக்ஷுக்களால் க்ரமமாக அநுஸரிக்கத்தகுந்தவைகளாக ஆகும். எந்த வஸ்துவும் முன்பாக அநேகங்களாகத்தோன்றி பிறகு அநேகங்கள் என்றது போய் ஒன்றாகத்தோன்றினாலும், அது ஒரு

விசேஷண விசிஷ்டமாகத்தோன்றி பிறகு சுத்தமாகப் புலப்படு கிறது என்பது லோகத்தில் அநுபவ ஸித்தமாயிருக்கிறது.

கூபகநநத்தை *(கிணறு வெட்டுவதை)* இதற்கு உதாஹரண மாக வைத்துக் கொள்ளலாம். முன்பாக ஜலம், களி, சுக்கான் இவை களெல்லாம் சேர்ந்து வருகின்றன. பிறகு களி, சுக்கான் போய் ஜலம் மட்டும் கலங்கலாக வருகிறது. அதற்குப் பிறகு கொஞ்ச காலம் கழித்து சுத்தமான ஜலம் வருகிறது. அதற்குப்பிறகு யத்னம் செய்து அடைய வேண்டிய வஸ்து வேறொன்றுமே இல்லை.

நேத்ர தோஷமுள்ளவனுக்கு சந்த்ரன் ஒன்றானாலும் இரண்டு போல் தோன்றும். அந்த நேத்ரத்திற்கு ஸ்தூல தோஷம்போய் ஸூக்ஷ்மமான தோஷம் மட்டும் இருந்தால், சந்த்ரன் ஒன்றாகத் தோன்றினாலும், அதன் மத்தியில் களங்கம் தோன்றும். ஸூக்ஷ்ம தோஷம் போய்விட்டு சுத்தமான சக்ஷுஸ்ஸோடு கூடினவர்களுக்கு களங்கமும் தோன்றாமல் சுத்தமாக சந்த்ரன் மட்டும் ப்ரகாசிக்கும்.

மஹாபுருஷாளுடைய முகத்திற்கோ, உத்தம ஸ்த்ரீகளுடைய முகத்திற்கோ சந்த்ரனை உதாஹரணமாகச் சொல்கிற கவிகள் ஸகளங்கமான சந்த்ரனை உதாஹரணமாகச்சொல்வதில்லை. நிஷ் களங்கமான சந்த்ரனைத்தான் உதாஹரணமாகச் சொல்வது வழக்கம். அந்த சந்த்ரனிடத்தில் உள்ள களங்கமும் மறைந்து சுத்தமாக பாஸிக் கிற ஸந்தர்ப்பமும் உபராக *(க்ரஹண)* காலங்களில் நேரக்கூடும். அதை அநுஸரித்துத்தான் राहुग्रस्त दिवाकरेन्दुसदृशः என்ற ப்ரயோகமும் சுத்தமான ஆத்ம ஸ்வரூபத்தை போதிப்பதில் உதாஹரணமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படி சுத்தமான ஆத்ம ஸ்வரூபம் மட்டும் ப்ரகாசிக்கும் அத்வைத நிலையையோ, ईशानः सर्वविद्यानां என்ற ச்ருதியை அனுஸரித்து ஸர்வ கலாநிதியான பரமேச்வரன் ஒருவன்தான் ப்ரகாசப் படுத்த முடியும். அதனால்தான் மஹா கைலாஸத்துக்கு அதிபதி யான பரமேச்வரனே இந்த புண்ய பூமியில் சங்கர பகவத் பாதா ளுடைய ரூபமாக அவதாரம் செய்து அந்த அத்வைத தாம்ரு தத்தை உலகில் ப்ரசுரப்படுத்தினார்கள்.

அதிலும் அதிகாரிகளுடைய தாரதம்யத்தை அனுஸரித்து, சில ஸந்தர்ப்பங்களில் கம்பீரமாயும் விஸ்தாரமாயுமுள்ள க்ரந்தங்களாலும், சில ஸந்தர்ப்பத்தில் சுருக்கமாயுள்ள க்ரந்தங்களாலும், ஸகல வேத ஸாரமாகிய அத்வைதாம்ருதத்தை வெளிப்படுத்தியிருக்கிறார்கள். அதில் मनीषापञ्चकं மநீஷாபஞ்சகம் என்ற ஒரு அரும் பெரிய க்ரந்தம் லோக ப்ரஸித்தமானது. சங்கர பகவத் பாதாள் வாராணஸீ *(காசீ)* க்ஷேத்ரத்தில் வஸிக்கும் போது இந்த ஜகத் குருவினுடைய அத்வைதாநுபவத்தை ப்ரகாசப்படுத்த ஸாக்ஷாத் **விச்வேச்வரனே** சண்டாள வேஷத்தை தரித்துக் கொண்டு ஆசார்யாளோடு ஸல்லாபம் செய்யும்போது, ஆசார்யாளால் வெளியிடப்பட்ட ஓர் உயர்தர ஜீவரத்நமாகும்.

மதுரை அத்வைத ஸபையின் ஆதரவில் 1920 ஷு நடைபெற்ற ஸ்ரீ ஜகத்குரு ஆசார்யஜயந்தி உத்ஸவ காலத்தில் ஷை ஸபா பண்டிதரான **சாஸ்த்ர ரத்னம் ப்ரஹ்மஸ்ரீ தேதியூர் ஸுப்ரஹ்மண்ய** சாஸ்த்ரிகளவர்களால் உபந்யஸிக்கப்பட்ட இந்த மநீஷாபஞ்சகத்தின் ஸாராம்சத்தை சில பக்த ஜனங்களால் அப்பப்போது எழுதித் தயாரிக்கப்பட்டதைப் புஸ்தக மூலமாக வெளிப்படுத்தவேண்டுமென்ற மஹா ஜனங்களுடைய ப்ரார்த்தனைக் கிணங்கி, அந்த ஸமயத்தில் ஷை ஸபையின் ஆதரவில் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது. அத்வைதாபிமானிகள் அனைவரும் இதை வாங்கிப் படித்தால் அத்வைத ஸித்தாந்தம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ப்ரகாசிக்கும் என்பது நிச்சயம்.

அவ்விதம் அச்சிடப்பட்ட ப்ரதிகள் பூராவும் அப்போதே செலவாகிவிட்டபடியாலும், மறுபடியும் வேண்டுமென்று ஆவலுடன் ப்ரார்த்திக்கிற ஆஸ்திகாபிமானிகளுடைய வேண்டுகோளுக் கிணங்கி இப்பொழுது புதிதாக அச்சிடப்பட்டிருக்கிறது.

மதுரை
*13—3—36*

இப்படிக்கு,
**M.V. ஸுப்ரமண்ய அய்யர்**
B.A., B.L., (Advocate)



नारायणं पद्मभुवं वसिष्ठं शक्तिं च तत्पुत्रपराशरंच
व्यासं शुकं गौडपदं महान्तं गोविन्दयोगीन्द्रमथाऽस्यशिष्यम् ।
श्रीशंकराचार्यमथाऽस्य पद्मपादं च हस्तामलकं च शिष्यं
तं तोटकं वार्तिककारमन्यान् अस्मद्गुरून्सन्ततमानतोऽस्मि ॥

सदाशिवसमारंभां भगवत्पादमध्यमां ।
अस्मदाचार्यपर्यन्तां वन्दे गुरुपरंपराम् ॥



1-8-41

சாஸ்த்ர ரத்னாகரம்

ப்ரஹ்மஸ்ரீ தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள்



॥ श्रीः ॥

॥ ॐ नमः परमगुरुभ्यः ॥

# மனீஷாபஞ்சகம்

स्वप्रकाशचिदानन्दसदैकरसरूपिणे ।
नित्यशुद्धनिराभासकूटस्थायात्मने नमः ॥

स्वप्रकाशचिदानन्दसदैकरसरूपिणे ஸ்வயமாகவே ப்ரகாசிக்கும் தன்மையோடு கூடினதாயும், ஞானஸ்வரூபமாயும், ஆனந்த வடிவமாயும், சென்ற காலம், நிகழ்காலம், வருங் காலம் என்ற முக்காலத்திலும் அழிவில்லாமலிருக்கும் தன்மையோடு கூடின இன்பமான வடிவுள்ளதாயும்; नित्यशुद्ध निराभास कूटस्थाय முக்காலத்திலும் தள்ளத்தகாததான நிர்மலஸ்ரூபத்தைத் தவிர வேறுபடாத ப்ரகாசரூபமாயும், விகாரமற்றதாயும் இருக்கிற, आत्मने ஸகல ஜகத்தின் உள் அந்தர்யாமியாய் விளங்கிவரும் ஆத்மஸ்வரூபத்தின் பொருட்டு; नमः நமஸ்காரம்.

தாத்பர்யம்:— இவ்வுலகில் எவ்வித காரியத்தைச் செய்ய ஆரம்பம் செய்தாலும் நம் பெரியோர்கள் அக்காரியம் இடையூறில்லாமல் மங்களத்தோடு முடிவுபெறுமாறு, தம் இஷ்ட தேவதையை வந்தனம் செய்து கொண்டே எண்ணின காரியத்தை ஆரம்பிக்கும் மரியாதை யாவருக்கும் தெரிந்த விஷயம்.

அப்பெரியோர்களும் समाप्तिकामो मङ्गलं आचरेत् அதாவது, காரியத்தின் முடிவை இச்சிக்கிறவன் இஷ்ட தேவதையை நமஸ்கரிக்கின்றதான மங்களத்தைச் செய்யட்டும் என்ற ப்ரமாணத்தை நம்பித்தான் காரியத்தின் ஆரம்பத்தில் இஷ்ட தேவதையை நமஸ்கரிக்கின்றார்கள். அவ்விதமே, சுத்த அத்வைதமத ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹத்தை நன்றாய் விளக்கும் இந்த க்ரந்தத்தை ஆரம்பித்தவரான வித்வானும் தன் இஷ்ட தேவதையை முதல் ச்லோகத்தால் நமஸ்கரிக்கின்றார். அதாவது இந்த கவியானவர் அத்வைதமத ஸித்தாந்தத்தைக் கைக்கொண்டவராகையால், அன்னகோச, ப்ராண கோச, மனோகோச, விக்ஞானகோச, ஆனந்தகோசமென்ற பஞ்சகோசங்களைக் காட்டிலும் வேறுபட்டதான தனது ஆத்ம ஸ்வரூபத்தில், ஸகலமான இவ்வுலகம் பழுதையில் பாம்பைப் போல் கல்பிக்கப்பட்டதென்றும், தனது ஸ்வரூபத்தைத் தவிர வேறு வஸ்து இருப்பதாகத் தோன்றாத சிறந்த வேதாந்த ஸித்தாந்த அனுபவத்தை அடைந்தவராகையால், தனது ஸ்வரூபத்தையே நமஸ்கரித்துக்கொள்கிறார். அதாவது தனது ஸ்வஸ்வரூபத்தை அநுஸந்தானம் செய்து கொள்கிறார். அதாவது நான் ஸ்வப்ரகாசன், ஞானமயன், ஸுகமயன், அழிவில்லாதவன், இல்லையென்ற சப்தத்தால் சொல்லத் தகாதவன், மலரஹிதன், என்னைத் தவிர வேறுபடாத ப்ரகாச மயன், நிர்விகாரன், இதுதான் என் வாஸ்தவஸ்ரூபம். நான் தான் ப்ரஹ்மம், ப்ரஹ்மந்தான் நான். என் ஸ்வரூபத்தைத் தவிர வேறொன்றும் எக்காலத்திலும் இல்லை, என் ஸ்வரூபத்தை தெரிந்து கொள்ளாதவனுக்கு பழுதையின் ஸ்வரூபத்தை தெரிந்து கொள்ளாதவனுக்கு, அதில் பாம்பு தோன்றுவது போல், என்னிடத்தில் இவ்வுலகம் தோன்றுமே தவிர, என் ஸ்வரூபத்தை மேற்கண்ட ப்ரகாரம் தெரிந்து கொண்டவனுக்கு, பழுதையின் ஸ்வரூபத்தைத் தெரிந்து கொண்டவனுக்கு பாம்பு தோன்றாதது போல், இவ்வுலகம் தோன்றாது. நிர்விகாரஸ்வரூபியான நான் ஒருவன்தான் ப்ரகாசிப்பேன். நான் தான் ப்ரஹ்மம் என்று கவியின் அனுபவம்.

आनन्दघनमद्वन्द्वं निर्विकारं निरञ्जनम् ।
भजेऽहं भगवत्पादं भजतामभयप्रदम् ॥

**आनन्दघनम्,** ஆனந்தக்கட்டியாயும்; **अद्वन्द्वम्,** இரண்டற்ற தாயும்; **निर्विकारम्,** பிறப்பு, இருப்பு, வளர்ச்சி, மாறுபாடு, குறைவு, மரணம் என்னும் ஆறுவிதமான விகாரமற்றதாயும்; **निरञ्जनम्,** அழுக்கில்லாததாயும்; **भजताम्,** தன்னை ஆச்ரயித்த வர்கட்கு; **अभयप्रदम्,** ம்ருத்யுபயத்தை நிவர்த்தி செய்கிறதாயு மிருக்கிற; **भगवत्पादम्,** பகவத்பாதாள் என்ற ஒரு தேஜஸ்ஸை; **अहं,** நான்; **भजे,** பூஜிக்கிறேன்.

முன் ச்லோகத்தால் தன் ஆத்மஸ்வரூபத்தைத் தவிர வேறான வஸ்து இல்லாதபடியால் ஆத்மாவையே அநுஸந் தானம் செய்து கொண்டார் கவியென்று தாத்பர்யம் கூறப் பட்டது. ஆகிலும், கல்பனை, வ்யவஹாரம், உண்மையென்ற மூன்று விதமான அவஸ்தைகளில், உண்மையென்ற மூன்றா வது அவஸ்தையில், முன் ச்லோகத்தில் கூறிய ப்ரகாரம் தனது ஆத்மஸ்வரூபத்தைத் தவிர வேறு வஸ்துவில்லாவிடி னும், வ்யவஹாரம் என்ற அவஸ்தையில் ஆத்மாவைத் தவிர இரண்டாவதும் தோன்றுகிறபடியாலும், அந்த வ்யவஹாரம் பெரும்பாலும் உலகில் விளங்கிவருகிறபடியாலும் அதை அநுஸரித்து தன்னைக் காட்டிலும் வேறு வஸ்துவை தனக்கு பூஜ்யமாய் பாவித்து, அதிலும் இக்கவியானவர் எந்த மஹா னுடைய 'மனீஷாபஞ்சகம்' என்ற வாக்கின் அபிப்ராயத்தை வெளியாக்க விரும்பினவரோ அந்த மஹானான ஜகத் குருவான ஸ்ரீ சங்கர குருவே பூஜ்யமென்ற எண்ணத்துடன் அவரை பஜித்துவருகின்றார். அதாவது ஸகல வேதாந்தத்தி லும் கூறப்படுகின்றதான ஆநந்தம்தான் சரீரத்தோடு எல்லாரும் பார்க்கும்படி வெளியாய் வந்திருக்கிறதோ என்று தோன்றக் கூடியதாயும் எவ்விதத்திலும் தன்னைத் தவிர வேறு ஜகத் தில்லை என்ற அனுபவத்தை ஸகலருக்கும் தோன்றும்படி

யான மூர்த்தியாயும், பிறப்பு, இருப்பு, வளர்ச்சி, மாறுபாடு, குறைவு, மரணம் என்ற ஆறுவிதமான விகாரமும் தன்னைச் சேர்ந்ததல்ல என்ற அனுபவவடிவாயும், அக்ஞானமாகிற அழுக்கோ, அதினால் கல்பிக்கப்பட்டதான புத்ரன், பணம், ஸ்த்ரீ என்ற பந்தமோ இவைகளைத் தள்ளின சித்ரூபமாயும், தன்னை அண்டின சிஷ்யர்களுக்கு ஸம்ஸாரமாகிற ம்ருத்யு வால் உண்டாகும் பயத்தைப் போக்கடித்து தன்னைப் போல் அவர்களையும் செய்யக்கூடிய வைபவமுள்ளதாயும், ஸ்ரீ பகவத்பாதாள் என்ற பெயரால் உலகம் எங்கும் ப்ரஸித்தி பெற்றதாயும் இருக்கிற ஸ்ரீ பரமசிவனுடைய ஒரு தேஜஸ்ஸை நான் எக்காலத்திலும் நினைக்கிறேன்.

இவ்வுலகில் அநேகவிதமான அநர்த்தங்களாகிய திமிங் கலங்களுக்கு இருப்பிடமான ஸம்ஸாரம் என்ற ஸமுத்ரத்தில் முழுகிக் கொண்டு கரையேறும் வழியைக் கண்டுபிடிக் காமல் தத்தளித்துக் கொண்டு இருக்கும் ஜீவகோடிகளின் கஷ் டத்தைப் பார்த்து, கருணைக்கிருப்பிடமான ஸாக்ஷாத் பரம சிவன் எவ்விதத்திலும் ஜீவகோடிகளை ஸம்ஸாரமாகும் ஸமுத்திரத்தினின்றும் கரையேற்றிவிட்டு, அவர்களை பரமானந்த லாபத்தை அடையும்படி செய்யவேண்டியது கருணைக்கிருப்பிடமான நம்முடைய கடமையல்லவாவென்று ஆலோசித்து, ஸம்ஸார ஸமுத்ரத்தினின்றும் கரையேறும் உபாயமான தத்வஞானம் என்ற தோணியை பூலோகத்தில் ஆங்காங்கு ஸ்தாபனம் செய்ய, கேரள தேசத்தில் காலடி என்ற செழிப்பான அக்ரஹாரத்தில் சிவகுரு என்ற மகா ப்ராஹ் மணனுடைய பத்னியான ஸதி என்ற மஹா பதிவ்ரதையி னிடத்தில் மனுஷ்ய வடிவாக அவதரித்தார் என்பது ஸ்ரீ சங்கர விஜயம் என்ற நூலில் கூறப்படுகிறது. அவ்விதம் அவதாரம் செய்த பரமசிவனுக்கு மூன்றாவது வயது முடியுங் காலத்திற் குள் ஸகல வித்தைகளுடைய பரிஞ்ஞானமானது உண்டான தோடுங்கூட, பிதாவான சிவகுருவும் பரமசிவனைப் புத்ர னாய் அடையும்படி பாக்யத்தைச் செய்திருந்தும் அவ்வித

புத்ரனுடைய வைபவத்தைப் பார்த்து ஆனந்திக்க பாக்ய ஹீனனாய் லோகாந்திரம் சென்றார். பகவான் தன்னைப் பார்த்தவர்களுக்கு (शंकरः, शं, ஸுகத்தை; करोति, செய்கிறார், என்றபடி) ஸுகத்தை செய்து வந்தபடியால் சங்கரன் என்ற பெயருடன் ப்ரகாசித்துக் கொண்டு தன்னுடைய மாதாவை பரிபாலனம் செய்து வருவதோடுங்கூட அந்த அக்ரஹாரத்தில் அபர ஸூர்யனைப் போல் விளங்கி வந்தார். இவ்விதம் விளங்கி வரும் சங்கரருக்கு ஐந்தாவது வயது சாஸ்த்ர ப்ரகாரம் உபநயனம் க்ராமத்திலுள்ள ஞாதி ஜனங்களால் நடத்தி வைக்கப்பட்டது. ஏழாவது வயது நடைபெறும் பொழுது இவ்வுலகில், தீவ்ரமான வைராக்யமும், உலகம் நச்வரம் *(அழிவுள்ளது)* என்ற அறிவும் உண்டாகி வேதாந்த விசாரத்திற்கு அந்தரங்க உபாயமான ஸந்யாஸத்தை ஸ்வீகரித்துக் கொண்டு, ஸத்குருவினுடைய அநுக்ரஹத்தால் ஆத்ம ஞானத்தை அடைய தீர்மானித்து, ஸந்யாஸத்திற்கு தனது மாதாவை அநுமதி தரவேண்டுமென்று ப்ரார்த்தித்தார். தந்த்ரமான ஒரு உபாயத்தால் மாதாவினுடைய அநுமதியைப்பெற்றுக் கொண்டு ஸந்யாஸாச்ரமத்தையடைந்து சாஸ்த்ரப்ரகாரம் ஸ்ரீ கோவிந்த பகவத்பாதாள் என்ற பரம குருவினுடைய அருகில் உபதேசத்திற்காகச் சென்றார். அவ்வித உத்தம சிஷ்யனான ஸ்ரீ சங்கரரை ஸ்ரீ கோவிந்த பகவத்பாதாள் என்ற பரமகுருவும் ஸ்வீகரித்துக் கொண்டு நான்கு வேதங்களுடைய ஸாராம்சமான நான்கு மஹா வாக்யங்களை ப்ரீதியுடன் உபதேசித்து, "வேத வ்யாஸாசார்யரால் செய்யப்பட்ட ப்ரஹ்ம ஸூத்ரங்களுக்கு பாஷ்யம் செய்ய நீ ஒருவன்தான் வல்லவன். வ்யாஸருடைய அபிப்ராயமும் உன் அபிப்ராயமும் ஒன்று என்பதை நான் அறிந்து கொண்டவன். ஸர்வக்ஞனான நீ காசீ க்ஷேத்ரம் சென்று, நான் சொன்ன ப்ரகாரம் ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யத்தைச் செய்து, அதை உலகத்தில் பிரஸித்தியாகும்படி ப்ரகடனமும் செய்ய அநேக சிஷ்யர்களையும் ஸ்தாபநம் செய்து வா" என்றும் ஆக்ஞாபித்தார். ஸ்ரீ சங்கரரும் குருவினுடைய கட்டளைக்கிணங்கி, காசீ க்ஷேத்ரம் சென்று பஞ்ச மஹா பாதகங்களைக் கண்ட

மாத்திரத்தால் போக்கடிக்கும் தன்மையுள்ள கங்கையில் தினந்தோறும் ஸ்நாநம் செய்து கொண்டு, ஸ்ரீ விச்வநாதனை தர்சனம் செய்வதோடுங்கூட வ்யாஸருடைய அபிப்ராயம் எவ்விதம் என்று கண்டுபிடிக்க ஸமாதியில் ஸ்ரீ விச்வநாதனை த்யாநம் செய்து கொண்டு வந்தார். இவ்விதமிருக்க ஸநந்தனர், ஆநந்தகிரி, சித்ஸுகர் என்ற மூன்று உத்தம சிஷ்யர்களும் ஸ்ரீ சங்கர குருவினுடைய பாதாரவிந்தத்தில் தத்வோபதேசத்திற் காக வந்து சேர்ந்தார்கள். அவர்களையும் சிஷ்யர்களாக அங்கீ கரித்துக் கொண்டு ஸ்ரீ சங்கர குருவானவர் தன் குருவான ஸ்ரீகோவிந்த பகவத்பாதாளால் உபதேசிக்கப்பட்ட நான்கு மஹாவாக்யங்களுடைய அர்த்தங்களை தன் சிஷ்யர்களுக்கு விவரமாய் உபதேசித்துக் கொண்டு வரும் ஸமயத்தில், ஒரு தினம் பகல் ஸுமார் 12 மணிக்கு, அதாவது மாத்யாந்ஹிக காலத்தில் ஸ்நாநம், அநுஷ்டானம் இவைகளைச் செய்வதற் காக சிஷ்யர்களோடு கங்கையைக் குறித்துப் போகும் வழி யில், இந்த சங்கர குருவினால் தினந்தோறும் ஸமாதியில் த்யானம் பண்ணப்பட்ட ஸ்ரீ விச்வநாதனே ஸ்ரீ சங்கர குருவி னுடைய அத்வைத ஸித்தாந்த அநுபவ ஸாரத்தை ஸ்ரீ சங்கர குருவினுடைய வாக்கிலிருந்தும் வெளிப்படுத்தி, அதனால் ஸகல ஜனங்களுக்கும் மிகுந்த ச்ரேயஸ்ஸைச் செய்யவேண்டு மென்ற கருணையோடுங்கூட ஸ்ரீ சங்கர குருவினிடத்தில் மிகுந்த பூஜ்யபாவத்தை ப்ரசுரம் செய்யுமாறு சண்டாள வேஷம் பூண்டு உண்மையான ஸ்வரூபத்தை விளக்கிக் காட்டுகிற தான நான்கு வேதங்களையும் நான்கு நாய்களாகச் செய்து கொண்டு ஸ்ரீ சங்கர குருவிற்கு எதிராக வந்தார். இவ்விதம் வரும் நான்கு நாய்களோடு கூடின சண்டாளனைப்பார்த்து ஸர்வக்ஞனான சங்கர குருவும் லோகாசாரத்தைக் காப்பாற்றத் தானும் அவ்விதம் செய்ய வேண்டுமென்ற பாவனையோடு, ஹே, சண்டாளா! நான் ப்ராஹ்மண ஸந்யாஸியல்லவா? நீ கீழ் குலத்தில் பிறந்தவனல்லவா? இவ்விதமிருக்க நீ என் அருகில் வரக்கூடாதவன், தூர விலகிப் போ, தூர விலகிப்

போவென்று கோபத்துடன் சொன்னார். அதைக் கேட்டு *அந்தச் சண்டாளன் பதில் கூறினதாவது:—*

अन्नमयादन्नमयमथवा चैतन्यमेव चैतन्यात् ।
यतिवर दूरीकर्तुं वाञ्छसि किं ब्रूहि गच्छगच्छेति ॥

**यतिवर,** *ஹே ஸந்யாஸிகளுக்குள் சிரேஷ்டனே!* **अन्नमयात्,** *அன்னரஸத்தால் உண்டான சரீரத்தினின்றும்;* **अन्नमयम्,** *சரீரத்தையா;* **अथवा,** *இல்லாவிடில்;* **चैतन्यात्,** *சித்ரூபமான ஆத்மாவினின்றும்;* **चैतन्यमेव,** *சித்ரூபமான ஆத்மாவையேதானா;* **गच्छगच्छेति,** *போ போவென்று;* **दूरीकर्तुम्,** *தூரவிலக்குவதற்கு;* **वाञ्छसि,** *இச்சிக்கிறாய்;* **किं,** *என்ன;* **ब्रूहि,** *சொல்லு.*

*தாத்பர்யம்:—* ஹே உத்தம ஸந்யாஸியே! வேஷம் ஸந்யாஸியாயிருந்தும் ஆச்ரமத்திற்கேற்ற அநுபவம் சற்றேனும் உன்னிடத்தில் இல்லையென்பது உன் வார்த்தையினின்றும் நிச்சயமாய் தெரிய வருகிறது. ''ஹே! சண்டாளா! தூரப்போ''வென்று சொன்ன உன் அபிப்ராயம், தேஹத்திற்கும் மற்றொரு தேஹத்திற்கும் சேர்க்கை கூடாதென்பதா! அல்லது ஆத்மாவுக்கும் மற்றொரு ஆத்மாவுக்கும் சேர்க்கை கூடாதென்பதா? முதலாவது அபிப்ராயம் மிகவும் தப்பு. உலகத்தில் ஒரு மண்ணி நின்றும் உண்டான தோண்டி, வாணை என்ற இரண்டு பதார்த்தங்கள் தோண்டி, வாணை என்ற பெயரினால் வேறுபட்டாலும், காரணமான மண்ணை ஆலோசிக்க இரண்டும் எவ்விதம் ஒன்றுதானோ, அவ்விதமே ஒரே அன்னமென்ற காரணத்தினின்றும் உண்டான உன் தேஹம், என் தேஹம் என்ற இரண்டுகளும் சண்டாளன், ப்ராஹ்மணன் என்ற பெயரால் வேறுபட்டாலும் காரணமான அன்னத்தை ஆலோசிக்க ஒன்றல்லவா? தவிர, இந்த தேஹத்திற்கும் கல்லிற்கும் சற்றேனும் பேதமுண்டா? இந்த தேஹம் ஜடமல்லவா? அந்த ஜடமும் காரணத்தை ஆலோசிக்க

ஒன்றேயல்லவா? அவ்விதமிருக்க இரண்டாவதொன்றுண்டு என்றெண்ணி தூரப்போவென்று சொன்ன உன்னுடைய வார்த்தைபெரும் தப்பென்பதற்கு என்னுடன் தொடர்ந்து வரும் இந்த நான்கு நாய்களே ஸாக்ஷியாகும்.

இரண்டாவது அபிப்ராயமும், தப்பென்றே தீர்மானம்.

(एकोदेवः सर्वभूतेषु गूढः सर्वव्यापी सर्वभूतान्तरात्मा एकः, ஸகல ஜகத்திலும் அந்தர்யாமி ஒருவன்; देवः, ஸ்வயம்ப்ரகாசரூபி; सर्वभूतेपु, ஸகல ப்ராணிகளிலும்; गूढः, பஞ்சகோசங்களால் மறைக்கப்பட்டவன்; सर्वव्यापी, உள்ளும் வெளியும் நிறைந் தவன்; सर्वभूतान्तरात्मा, ஸகல ப்ராணிகளுக்கும் அந்தர்யாமி யான ஆத்மா) என்ற ச்ருதியால் சித்ரூபமான ஆத்மா ஒன்றே என்று கூறப்படுகிற படியாலும், வேதாந்த ஸித்தாந்த அநுபவ நிஷ்டர்களுடைய அநுபவமும் அவ்விதமேயான படியினாலும், ஒரே ஆத்மாவுக்கு விலகுகிறவன் என்றும், விலகச் சொல்லு கிறவனென்றும், இல்லாதபடியால் இரண்டாவது அபிப்ராய மும் தப்பென்பதற்கு யாதொரு ஸந்தேகமுமில்லை. தவிர, ஆத்மா எங்கும் நிறைந்த வஸ்துவல்லவா? நான் எவ்வளவு தூரம் விலகினாலும் அங்கேயும் ஆத்ம வஸ்து இருக்கின்ற தல்லவா? ஒன்றோடும் ஸம்பந்தமில்லாத ஆத்மாவுக்கு மற் றொன்றோடு சேர்க்கைதான் எவ்விதம் வரும்? இவ்விதமான தாத்பர்யங்களை நினைத்தல்லவா,

परस्य भावकर्माणि न प्रशंसेन्न गर्हयेत् ।
विश्वमेकात्मकं पश्यन्प्रकृत्या पुरुषेण च ॥

प्रकृत्या, மாயாவிகாரம் என்றதாலும்; पुरुषेण, அந்தர்யாமி யினாலும்; विश्वम्, உலகத்தை; एकात्मकम्, ஒரே ஸ்வரூபமாக; पश्यन्, அநுபவிக்கிறவனாய்க் கொண்டு; परस्य, மற்றவனுடைய; भावकर्माणि, அபிப்ராயங்களையும் செய்கைகளையும்; न प्रशंसेत्, ச்லாகிக்கவும் கூடாது; न गर्हयेत्, நிந்திக்கவும் கூடாது.

அதாவது ஜடம், சித்தென்று இரண்டு விதமான உலகில், ஜடமான உலகத்திற்கு ஒரே மாயை காரணமாகிற படியால் ஒரே மாயையான காரணத்தினின்றும் உண்டான இவ்வுலகம் முழுமையும் ஒன்றே. தவிர, ப்ரகாச ரூபமான ஆத்மாவில் ஜடமான இவ்வுலகம் கானலில் ஜலம் போல் கற்பிக்கப்பட்டது. கானலில் தோன்றுகிற ஜலத்திற்கு கானலி னுடைய ஸ்வரூபத்தைத் தவிர வேறு ஸ்வரூபம் எவ்விதம் இல்லையோ, அவ்விதம் ஆத்மாவில் தோன்றும் இவ்வுலகத் திற்கும் ஆத்ம ஸ்வரூபத்தைத் தவிர வேறு ஸ்வரூபம் இல்லை. இவ்விதம் அநுபவத்தையடைந்த யார் யாரை ஸ்துதிக்கவோ நிந்திக்கவோ முடியும் என்று) இவ்விதம் கூறப்படுகிறது.

தவிர, ஒரே விதமான சைதன்யத்தினுடைய ஸ்வரூபத் தில் ப்ராஹ்மணனென்றும், சண்டாளனென்றும் பேதத்தைக் கற்பிப்பது சாஸ்த்ரங்களுக்கு சம்மதமாகுமோ?

प्रत्यग्वस्तुनि निस्तरङ्गसहजानन्दाववोधाम्बुधौ
विप्रोऽयं श्वपचोऽयमित्यपि महान्कोऽयं विभेदग्रहः ।
किं गङ्गाम्बुनि बिंबितेऽम्बरमणौ चण्डालवीथीपयः-
पूरेवान्तरमस्ति काञ्चनघटीमृत्कुम्भयोर्वाम्बरे ॥

प्रत्यग्वस्तुनि, பொய்யாயும் ஜடமாயும், துக்க ரூபமாயும், இருக்கிற இப்பிரபஞ்சத்தைக் காட்டிலும் வேறுபட்டதாயும், முற்காலத்திலும் அழிவில்லாததாயுமிருக்கிற ஆத்மவஸ்ரூப மாகிய; निस्तरङ्गसहजानन्दाववोधाम्बुधौ, பெரிது சிறிது என்று வாதம் செய்ய முடியாததாயும், ஸ்வபாவமுள்ளதாயும் அழி வில்லாததாயும் இருக்கிற சித் ரூபமான ஆனந்தக் கடலில்; अयं विप्रः, இவன் ப்ராஹ்மணன்; अयं स्वपचः, இவன் சண்டாளன்; इत्यपि, இப்படி என்றும்; विभेदग्रहः, பேதபுத்தியானது; कोऽयं, இதென்ன; *(எவ்விதம் வந்தது)*; गङ्गाम्बुनि, கங்கா ஜலத்திலும்; चण्डालवीथीपयःपूरे वा, சண்டாளனுடைய தெருவில் போகும்

ப்ரவாகத்திலும்; बिंबिते, ப்ரதிபிம்பிக்கப்பட்டதான; अंबरमणौ, சூரியனிடத்தில்; अन्तरम्, வித்யாஸம்; अस्ति किम्, உண்டோ? (இல்லை); कांचनघटीमृत्कुम्भयोः, தங்கக்குடம், மண்குடங்களி லிருக்கும்; अम्बरे, ஆகாசங்களைப் போல.

தாத்பர்யம்:— இப்பிரபஞ்சத்தைக் காட்டிலும் வேறான ஆத்ம ஸ்வரூபம் அலையற்று நெடுநாள் வாழும் ஆனந்தக் கடலல்லவா? இவ்விதம் ஒரே ரஸமான ஆனந்தக் கடலில் ஒரு பக்கத்தில் ப்ராஹ்மணன் என்ற தித்திப்பையும், மற் றொரு பக்கத்தில் சண்டாளன் என்ற கசப்பையும், எவ்வாறு கற்பிக்கிறாய்? ஆத்மாவில் நான் கற்பிக்கவில்லை. ப்ராஹ் மணன், சண்டாளன் என்ற இரண்டு சரீரத்தால், ஆத்மாவில் பேதம் கற்பிக்கும்படி நேரிடுகிறதென்று எண்ணுகிறாயோ? அதுவும் தப்பு. கங்கா ஜலத்திலும், சண்டாளனுடைய ப்ரதிபிம்பத்தில் பேதம் தோன்றுகிறதே எதனால் என்று கேட் கிறாயோ? தங்கக்குடத்திலும் மண்குடத்திலும் விளங்கி வரும் ஆகாசம் ஒன்றன்று என்று தங்கக்குடம்; மண்குடம் என்ற பேதத்தால் ஆகாசம் வேறுபடுகிறது போல் தோன்று கிறது; அதாவது உபாதியினுடைய பேதத்தால் பேதமே தவிர ஸ்வரூபத்தில் பேதமில்லை.

இந்தப் பிரகாரம் சாஸ்த்ரங்கள் ஆத்மஸ்வரூபம் ஒன்றே என்று கூறுங்காலத்தில் நீ பேதத்தைக் கற்பிப்பது மிகவும் தப்பு. அதிலும் ஸர்வோத்தமமான ஸந்யாஸ ஆச்ரமத்தை அடைந்து இவ்விதம் பேத கற்பனையைச் செய்கிற உம் முடைய தாத்பரியம் ஸந்யாஸத்தை வேஷமென்று வெளியாக்கு கிறதல்லவா? ஏன் இவ்விதம் வேதாந்த அனுபவமில்லாமல் ஸந்யாஸத்தை ஸ்வீகரிக்க வேண்டும்? பேத புத்தியுள்ளவ னுக்கு கர்மமார்க்கத்திலல்லவா அதிகாரம்? அதற்கு க்ரஹஸ் தாச்ரமம் அல்லவா வேண்டும்? ஆகையால் உன் தாத்பரியம் வித்வான்களுக்கோ, சாஸ்த்ரங்களுக்கோ, கொஞ்சமேனும் ஏற்கத்தகாததாயிற்று, என்று சண்டாள வேஷதாரியான பரம

சிவன், நாய் வேஷதாரிகளான நான்கு வேதங்களோடு கூட ஸ்ரீசங்கரகுருவைப் பரீக்ஷிக்க, ஸ்ரீசங்கரகுருவும் இவன் ஜாதியால் சண்டாளனாயிருக்க நியாயமில்லை; நம்மால் ஸமாதியில் த்யானம் செய்யப்பட்ட விச்வனாதன் தானோ வென்று ஸம்சயித்து அருகில்வர, சண்டாள வேஷதாரியான பரமசிவனும், ''ஹே. ஸன்யாஸி! நான் சண்டாளன், ஸமீ பத்தில் வரக்கூடாது, போ போ''வென்று மறுத்தளித்து விட்டு, ''ஏ ஆண்டே!'' என்று சண்டாளனைக் கூப்பிடுவது போலும் பாவிக்க, அச்சமயத்திலேயே பரமசிவனுடைய அந்தரங்க பக்தனான நந்திகேசுவரன் தானும் சண்டாள வேஷத்தை தரித்துக் கொண்டு நாலு வேதங்களுக்கும் மூலபூதனான ஓங்காரமென்னும் ப்ரணவத்தை செத்த நாயைப் போல் கற்பித்து, அதை இடது தோளிலும் போட்டுக் கொண்டு சண்டாள வேஷதாரியான பரமசிவன் அருகில் வர, ஸ்ரீ சங்கர குருவும் ''ஐயோ! என்ன கஷ்டமோ! வேஷத்தையும் ஆசாரத் தையும் பார்த்தால் சண்டாளனென்றே தோன்றுகிறது; பேச்சைப் பார்த்தால் ஸர்வ ஜகந்நியந்தாவோவென்று தோன்றுகிறது. எதுதான் உண்மையோ! இவ்விதம் தர்மசங்கடம் எனக்கும் ஏற்பட வேண்டுமோ! ஹே தெய்வமே! நீ இவ்விதம் சோதிக்க நான் என்ன குற்றம் செய்தேன்?'' என்று அநேக விதமான அனுதாபத்தோடு கூட ஸ்ரீ சங்கரகுருவானவர் அதின் தத்வத்தை விசாரிப்போமென்ற எண்ணத்தையடைந்தும், மறுபடி ஏன் விசாரிக்க வேண்டும்? இவ்விதம் அனுபவம் எவனுக்கு இருந்தாலும் அவனே ப்ரஹ்மம். அதே நான். அது தான் எனக்கு குரு. ஏன் வ்ருதாவாய் மனது சலிக்க இடங் கொடுக்க வேண்டுமென்ற தீர்மானத்துடன் தனது ஸ்வானு பவத்தைத் தன் அருகில் நிற்கும் ஸனந்தனர், ஆனந்தகிரி, சித்ஸுகர் என்ற மூன்று சிஷ்யர்களோ, மற்றவர்களோ, ஸமாதியாகிற ஸாதனமின்றியே அறியும்படி ப்ரகாசப்படுத்தக் கூடிய ஐந்து சுலோகங்களால் தன் அனுபவத்தை சண்டாள வேஷதாரியான பரமசிவனுக்கெதிரில் தெரியப்படுத்தி தான் முதலில் செய்த குற்றத்திற்கு மன்னிப்பாக சண்டாள வேஷ

தாரியான பரமசிவனையே குருவாக வரிக்கின்றார். அதாவது:—

जाग्रत्स्वप्नसुषुप्तिषु स्फुटतरा या संविदुज्जृम्भते
या ब्रह्मादिपिपीलिकान्ततनुषु प्रोता जगत्साक्षिणी ।
सैवाहं न च दृश्यवस्त्विति दृढप्रज्ञापि यस्यास्ति चेत्
चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ॥ १

**जाग्रत्स्वप्नसुषुप्तिषु**, *ஜாக்ரத், ஸ்வப்ந, ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளிலும், அதாவது சக்ஷுரிந்திரியம் (கண்), ச்ரோத்ரேந்திரியம் (செவி), க்ராணேந்திரியம் (மூக்கு), ரஸனேந்திரியம் (நாக்கு), த்வகிந்திரியம் (த்வக்), இந்த ஐந்து இந்திரியங்களாலும், ரூபம், சப்தம், கந்தம், ரஸம், ஸ்பர்சம் இந்த ஐந்துகளையும் அறிந்து ஸுகத்தையோ அல்லது துக்கத்தையோ அனுபவிப்பதான அவஸ்தையானது 'ஜாக்ரத்' அவஸ்தை என்று சொல்லப்படும். இவ்விதமான ஐந்து இந்திரியங்களையும் அறிகிற வ்யாபாரமற்று, முன் பார்த்திருந்த வாஸனையால் அந்த பதார்த்தமே எதிரில் நிற்பது போலும் அதைப் பார்ப்பது போலும் மனதால் கற்பித்துக் கொண்டு ஸுகத்தையோ துக்கத்தையோ அநுபவிப்பது போல் தோன்றும் அவஸ்தை 'ஸ்வப்னாவஸ்தை' என்பதாகும். ஸ்தூலம், ஸூக்ஷ்மம் என்ற இரண்டுவிதமான இப்பிரபஞ்சத்திற்கு காரணமான தனது ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ளாததான தெரியாத்தனமும், எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியான ஆத்மாவும், இரண்டே மாத்திரம் மீதமாயிருந்து வேறு விஷயங்களெல்லாம் ஒடுங்கிப்போன, அவஸ்தையானது 'ஸுஷுப்தி' அவஸ்தை எனப்படும். இம்மூன்று அவஸ்தைகளிலும்;* **प्रोता**, *அம்மூன்று அவஸ்தைகளையும் ப்ரகாசிப்பித்துக் கொண்டு தொடர்ந்து வருகிறதாயும்;* **स्फुटतरा**, *அம்மூன்று அவஸ்தைகளும் உண்டாகும் காலத்திலோ, அழியுங்காலத்திலோ, தான் உற்பத்தியையோ, அழிவையோ அற்றதாயும் இருக்கிற;* **या**,

யாதொரு; संवित्, சித்ரூபமான பரமாத்மா; उज्जृम्भते, ஸ்வய மாக ப்ரகாசித்து வருகின்றதோ; ब्रह्मादिपिपीलिकान्ततनुषु, ஸமஷ்டி, வ்யஷ்டி என்ற சரீரங்களில் அதாவது, ப்ரஹ்மா முதல் சிற்றெரும்பு பர்யந்தமான ஸகல சரீரங்களிலும் यासंवित्, யாதொரு சித்ரூபமான பரமாத்மா; प्रोता, அந்தர் யாமியாய் இருந்து கொண்டு அந்த சரீரங்களை ப்ரகாசிக்கும் படி செய்வதோடுங்கூட அந்த சரீரங்களை எப்பொழுதும் தொடர்ந்து வருகிறதோ; या संवित्, யாதொரு சித்ரூபமான பர மாத்மா; जगत्साक्षिणी, ஸகல ஜகத்திற்கும் ஸாக்ஷியோ, அதா வது, ஸகல ஜகத்தின் விஷயங்களைப் பார்க்கும் சக்தியுள் ளதோ, सैव, அந்த சித்ரூபமான பரமாத்மாதான்; अहम्, நான்; दृश्यवस्तु, அன்னகோசம், ப்ராணகோசம், மனோகோசம், விக்ஞான கோசம், ஆனந்தகோசம் என்ற பஞ்ச கோசங்களாக; न च, இல்லைதான்; इति, என்று; प्रज्ञा, புத்தியானது; दृढा, அழிக்க முடியாததாக; यस्य, எவனுக்காவது; अस्ति चेत्, இருக்குமே யானால், स तु, அவனோ என்றால்; चण्डालोऽपि, சண்டாள குலத்தில் உண்டானவனாகவோ; अस्तु, இருக்கட்டும்; द्विजः, ப்ராஹ்மண குலத்தில் உண்டானவனாகவோ; अस्तु, இருக் கட்டும்; सः, அவன்; मम, எனக்கு; गुरुः, ஆசார்யன்; इति, என்று; एषा मनीषा, இந்த புத்தி, அதாவது இவ்விதம் என் நிச்சயம்.

தாத்பர்யம்:—இவ்வுலகில் ப்ரதிதினமும் ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்று மூன்று விதமான அவஸ்தை கள் அவித்யையால் கற்பிக்கப்பட்டு, ஆத்ம ஸ்வரூபத்தில் ஏற்பட்டதுபோல் ப்ரகாசித்து வருகிறதல்லவா? அவ்வித மூன்று விதமான அவஸ்தைகளும் உண்மையில் விசாரிக்கும் காலத்தில் ஆத்ம ஸ்வரூபத்தல் கொஞ்சமேனும் ஏற்காத தன்மையோடு கூடினது ஆகிலும், மூன்று விதமான அவஸ்தை களுக்கு ஸாக்ஷியாய் அதில் ஸம்பந்தப்படாமல் ஸ்வப்பிர

காசனாய் விளங்கி வருவதே ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபமென்று வேதாந்த ஸித்தாந்தம். ஒருவன் ஒரு நகரில் பகலில் அநேகவிதமான காக்ஷிகளைப் பார்த்து, அவைகளைப் பார்க்குங்காலத்தில் தன்னால் பார்க்கப்பட்ட காக்ஷிகளைக் காட்டிலும், பார்ப்பதற்கு ஸாதனங்களான சக்ஷுஸ் முதலான இந்திரியங்களைக் காட்டிலும், தான் வேறு என்றதான அநுபவம் அவனுக்கு ப்ரத்யக்ஷமல்லவா? அவ்விதமே, இவ் விதமான காக்ஷிகளை நாம் பார்த்தோம், ரொம்பவும் ஆச்சரிய மாக இருந்தது, என்று தான் பார்த்த பிறபாடு க்ரஹத்தில் வந்து உட்கார்ந்து கொண்டு யோசிக்கும் காலத்தில், பார்த்த காக்ஷிகளெல்லாம் எதிரில் நிற்பது போலும், அதைத்தான் கண்களாகிற ஸாதனங்களால் பார்ப்பது போலும், தோன்று கிற அநுபவமும், எதிரே நிற்பது போல் தோன்றின காக்ஷி களைக் காட்டிலும், அந்த காக்ஷிகளைப் பார்க்க ஸாதனங்கள் போல் தோன்றின கண்கள் முதலான இந்திரியங்களைக் காட்டிலும், தான் வேறு என்பதையே ப்ரகாசப்படுத்தும் என் பதும் ப்ரத்யக்ஷ ஸித்தம்.

அவ்வித காக்ஷிகள் ஒன்றும் ஒரு விதத்திலும் தோன்றாம லும், தான் கண்களால் பார்ப்பதாகவோ, பார்ப்பது போலா கவோ, இவ்வித இரண்டு விதமான தோற்றமில்லாமல் ஒன்றும் தோன்றாமலிருக்கும் காலத்தில், அதாவது மனப்ரவ்ருத்தி இல்லாமலிருக்குங்காலத்தில் ஒன்றும் தோன்றாமலிருக் கிறது என்ற அவஸ்தையைக்காட்டிலும் தான்வேறு என்ற அநுபவம் ப்ரத்யக்ஷ ஸித்தம். இவ்வித மூன்று விதமான நட வடிக்கைகளை *(செய்கைகளை)*க் காட்டிலும், இந்த ஜாக்ரதா அவஸ்தையில் இந்த மூன்று விதமான செய்கைகளுக்கும் ஸாக்ஷியான புருஷன் இந்த மூன்றைக் காட்டிலும், வேறென்றே எவ்வாறு நிச்சயமோ அவ்வாறே, ஜாக்ரத், ஸ்வப்ன, ஸுஷுப்தி இந்த மூன்று விதமான அவஸ்தைகளுக்கும் ஸாக்ஷியான ஆத்மா மூன்று விதமான அவஸ்தைகளைக்காட்டிலும் வேறு என்பதற்கு ஆக்ஷேபணை உண்டோ? ஆகையால், இவ்விதம்

ஸ்வானுபவத்தால் ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளைக்காட்டிலும் ஆவிர்பாவ *(தோற்றம்)*, திரோபாவ *(மறைவு)* காலத்தில், தான் ஆவிர்பாவதிரோ பாவத்தை அடையாமல் ஸுத்த சைதன்ய ஸ்வரூபமான யாதொரு ஆத்ம ஸ்வரூபம் ஸ்வயம்ப்ரகாசமாய் விளங்கி வருகிறதோ அதுவேதான் நான், வேறுவிதமான மூன்றுவித மான அவஸ்தைகளுக்குட்பட்டவனல்ல. இம்மூன்று அவஸ்தை களும் என்னிடத்தில் கானலில் ஜலம் போல கற்பிக்கப்பட்ட தல்லவா? கற்பிக்கப்பட்ட ஜலத்தால் கானல் எவ்விதம் தன் ஸ்வரூபத்தை விடாதோ, அவ்விதமே, அவித்யையால் கற்பிக்கப்பட்ட அவஸ்தைகளால் நானும் என் ஸ்வரூபத்தை விடுவேனோ? அந்த அவித்யையும் என்னிடத்தில் கற்பிக்கப் பட்டதல்லவா? என்னிடத்தில் கற்பிக்கப்பட்ட அவித்யைக்கோ, அந்த அவித்யையால் கற்பிக்கப்பட்ட மூன்று விதமான அவஸ்தைகளுக்கோ, அதிஷ்டானமான என்னுடைய ஸ்வரூ பத்தைத் தவிர வேறு ஸ்வரூபமுண்டோ? இவ்விதம் கற் பிக்கப்பட்ட அவஸ்தைகளின் ஸ்வரூபமே உண்மையில் விசாரிக்க என் ஸ்வரூபமே. அவ்விதமிருக்க அவஸ்தைகள் ஒன்று இருப்பதுபோலவும் அதனால் தான் பாதிக்கப்படுவது போலவும் தோன்றுவது **असङ्गो हि अयं पुरुषः न हि सज्जते**

**अयं पुरुषः**, இந்த பூர்ணமான ஆத்ம வஸ்துவானது; **असङ्गः**, ஒன்றோடேயும் ஸம்பந்திக்கத்தகாதவன்; **न हि सज्जते**, ஒன் றோடும் ஸம்பந்திக்கும்படியாயும் ஏற்படக்கூடாதவன் என்ற ச்ருதிக்கும் ஸம்மதமாகுமோ? ஆகையால், நான் ஒன்றிலும் சேராதவன்; அஸங்கன், ஸாக்ஷி, என்ற அநுபவம்தான் சாஸ்த்ர ஸம்மதமான அநுபவம். இதை அநுஸரித்து மேற்கண்டவித அவஸ்தைகளுக்கு ஸாக்ஷியான சித்ரூபமே நான் என்றும்;

தவிர, ஸமஷ்டி, வ்யஷ்டி என்ற இரண்டு விதமான சரீரங்களிலும், அதாவது இப்பிரபஞ்சங்களிலுள்ள ப்ராணி களுடைய சரீரங்களெல்லாம் ஒன்று சேர்ந்து இவ்வுலகத்திற்கு

ஆதிகாரணபூதனான ஹிரண்யகர்ப்பன் என்ற ப்ரஹ்மாவி னுடைய சரீரமாகும். அதுதான் ஸமஷ்டி சரீரமென்று சாஸ் திரங்களில் கூறப்படுகிறது. வெவ்வேறாய் பிரிக்கப்படும் ப்ராணிகளின் சரீரங்கள் வ்யஷ்டிகளென்றும் கூறப்படும். இவ்விதமான வ்யஷ்டி, ஸமஷ்டியோ இரண்டு விதமான சரீரங்களிலும் அந்தர்யாமியாய் இருந்து கொண்டு மேற் சொன்ன சரீரங்களை ப்ரகாசிக்கும்படி செய்து கொண்டு, ஸகல ஜகத்திற்கும் ஸாக்ஷியாய் விளங்கும் யாதொரு சித்ரூப மான பரமாத்மாவுண்டோ அதுவே நான் என்றும், த்ருச்ய வஸ்துக்கள் நான் இல்லையென்றும்; அதாவது, அன்னகோசம், ப்ராணகோசம், மனோகோசம், விக்ஞானகோசம், ஆனந்த கோசமாகிய இவைகள் த்ருச்யமென்று சொல்லப்படும். அன்னகோசமாவது, ப்ரதிதினம் புஜிக்கப்படும் அன்ன ரஸத்தால் வளர்ந்து வரும் இத்தோல் மயமான ஸ்தூல சரீரமே. ப்ராணகோசமானது, சக்ஷுஸ் *(கண்)*, ச்ரோத்திரம் *(செவி)*, க்ராணம் *(மூக்கு)*, ரஸனம் *(நாக்கு)*, த்வக் இவ் வாறு ஐந்து வகையான ஞானேந்த்ரியங்கள், வாக்கு *(வாய்)*, பாணி *(கை)*, பாத *(கால்)*, பாயு, உபஸ்தம் *(கூடமான ஸ்தலங்கள்)* இவ்வாறு ஐந்து விதமான கர்மேந்த்ரியங்கள், ப்ராண, அபான, வ்யான, உதான, ஸமான என்று ஐந்து வித மான ப்ராணங்கள், இவ்வாறு பதினைந்து தத்வங்களும் ப்ராணகோசம், மனோகோசமாவது மனது, விக்ஞானகோச மாவது புத்தி, அதாவது ரூபம், சப்தம், கந்தம், ரஸனம், ஸ்பர்சம் என்ற ஐந்து விஷயங்களை அறிவதற்காக ஏற்பட்ட சக்ஷுஸ், ச்ரோத்ரம், க்ராணம், ரஸனம், த்வக் என்ற யாதொரு ஐந்து விதமான இந்த்ரியங்களுண்டோ அந்த ஐந்து விதமான இந்த்ரியங்களையும், ஐந்து விதமான விஷயங் களில் போகும்படி செய்வதோடுங்கூட ஐந்து விதமான விஷ யங்களையும் அறியும்படியான சக்தியையும் ஐந்து விதமான இந்த்ரியங்களுக்கு கொடுக்க வல்லமையுள்ள உள்ளதாக இருக்கும் ஒரு இந்த்ரியம் மனதென்று சொல்லப்படும். அதா வது, இவ்வித தன்மையுள்ள ஒருவிதமான சக்தி. இந்த

இந்த்ரியங்கள் விஷயங்களில் போவதிலோ, போகாமலிருப்பதிலோ, அதின் பிரேரணைதான் காரணம். இந்த இந்த்ரியங்களாகிற கூட்டத்திற்கு யஜமானனாய் விளங்கிவரும் இந்த்ரியம் மனதென்பதாகும். அந்த ஒரே சக்திக்கு இரண்டு விதம் பெயர். அதாவது மனதென்றும் புத்தியென்றும், ஒரு காரியத்தில் இந்த இந்த்ரியங்களை ப்ரவர்த்திக்கச்செய்வதில் சந்தேகமுள்ளதாயிருந்தால் அப்பொழுது மனம் என்று பெயர். மேற்கண்ட விஷயத்தில் நிச்சயமுள்ளதாக இருந்தால் அப்பொழுது புத்தி என்று பெயர். இவ்விதமான உள்ளே விளங்கும் ஸகல இந்த்ரியங்களுக்கும் ப்ரவர்த்தியைக் கொடுத்துவரும் விசேஷமான ஒரு சக்திக்கு, காரியத்தின் நிலைமையை அனுஸரித்து ஏற்பட்ட இரண்டு விதமான மனது, புத்தி என்றதான பெயரை அநுசரித்துத்தான் மனோகோசம், விக்ஞானகோசம் என்று சாஸ்த்ரத்தில் கூறப்படுகிறது. ஆனந்தகோசமாவது எதிரில் அழகான ஒரு வஸ்து இருக்கும் காலத்தில் கண்ணால் அதைப் பார்க்கும் பொழுது மனதானது அந்த அழகான வஸ்துவைப் போல் உள்ளே பரிணமிக்கும் காலத்தில் அந்த அஞ்ஞான ரூபமான மனதினுடைய பரிணாமத்தில் ஸ்வரூபமான ஆத்ம தத்வத்தின் ப்ரதிபிம்பம் அடிப்பது யாதொன்றுண்டோ அதுதான் ஆனந்தகோசம். இவ்வாறு, ஐந்து விதமான கோசங்களும் த்ருச்யங்களென்றே, அதாவது, அறிவிக்கும் விஷயங்களென்றே சொல்லப்படும் இவைகள் ஆத்மாவல்ல. இவைகளைக் காட்டிலும் ஆத்மதத்வம் வேறுபட்டது. உலகத்தில் மண் மயமான ஒரு பெரிய அறையை நிர்மாணம் செய்து, அதற்குள் சிவப்பு வர்ணத்தோடு கூடின கண்ணாடிகளால் மற்றொரு அறையை நிர்மாணம் செய்து, அதற்குள்ளாகவும் மலினமான வெள்ளை நிறமுடைய கண்ணாடிகளால் வேறொரு அறையை நிர்மாணம் செய்து, அதற்குள்ளாகவும் நிர்மலமான வெள்ளைக் கண்ணாடிகளால் ஒரு அறையை நிர்மாணம் செய்து, அதற்குள் ஸ்படிக சிலையால் மற்றொரு அறையை நிர்மாணம் செய்து, அதற்குள் ஒரு தீபம் வைக்கப்பட்டிருந்தால் அந்த தீபத்தினுடைய ப்ரகாச

மானது ஸமீபத்திலுள்ள ஸ்படிகமயமான சுவரிலும், அதில் நின்றும் நிர்மலமான வெள்ளை நிறமான கண்ணாடிச்சுவரி லும், அதில் நின்றும் மண்மயமான சுவரிலும் அடிப்பது அனுபவ ஸித்தமல்லவா? தவிர, இவ்வைந்து விதமான சுவர் களுமே ப்ரகாசமான வஸ்துகளோவென்று தோன்றும்படி யாய் ப்ரகாசிக்குமல்லவா? ஆனால், உண்மையில் இவ் வைந்தும் ப்ரகாசமுள்ள வஸ்துக்களல்ல. இவ்வைந்துக்கும் உள்ளாக விளங்கி வரும் தீபத்தின் ப்ரகாசத்தினுடைய ப்ரதி பிம்பம் அல்லவா வீசுகிறது? விவேகமுள்ளவன் இந்த மண் மயமான சுவரை பார்க்கும் பொழுது இது ஜடமல்லவா; இதற்கு எவ்விதம் ப்ரகாசம் ஏற்பட்டது? இதற்கு ஸ்வயம் ப்ர காசம் ஏற்பட நியாயமில்லை, ஆகையால் இதற்குள்ளேயும் போய்ப்பார்ப்போம்; அதற்குள்ளேயும் ப்ரகாசமிருக்கும்; அதினாலே இதற்கு ப்ரகாசம் ஏற்பட்டிருக்கலாம் என்று உள்ளே செல்ல, அவ்விடத்திலும் சிவப்பு வர்ணத்தோடு கூடிய ஒரு அறையைப் பார்த்து இதுவும் ஜடமல்லவா? இதற்கு ஸ்வயம் ப்ரகாசம் ஏற்பட நியாயமில்லை. இதற்குள்ளும் போவோமென்றாலோசித்து உட்செல்ல அவ்விடத்திலும் கொஞ்சம் மங்கின வெள்ளை நிறமான கண்ணாடி அறையைப் பார்த்து இதுவம் ப்ரகாசித்து வருகிறதே! முன் பார்த்தவை களைப்போல்தானே இவைகளும் ஜடம். என்ன ஆச்சரியம்! இதற்குள்ளாகவும் சென்று பார்ப்போமென்று நினைத்து, உட்செல்ல, மிகவும் சுத்தமான வெள்ளைக் கண்ணாடியால் செய்யப்பட்ட அறையைக்கண்டு, முன் பார்த்ததான சுவர் களைக் காட்டிலும் இச்சுவருக்கு அதிகமான ப்ரகாசமல்லவா தோன்றுகிறது! இதுவும் ஜடம்தானே. முன் பார்த்ததைக் காட்டிலும் இதற்கென்ன விசேஷம்; இன்னும் உள்ளே சென்று பார்ப்போமென்று போக ஒரே ஸ்படிகமயமான ரொம்ப வும் ப்ரகாசிக்கிறதான மற்றொரு அறையைப் பார்க்க, இந்த ப்ரகாசம் கண்ணைப் பறிப்பதுபோல் இருக்கின்றதல்லவா? இதற்கும் ப்ரகாசம் எக்காரணத்தினின்றும் ஏற்பட்டது? என்று நினைத்து அதற்குள்ளும் செல்ல அவ்விடத்தில் ஜ்வலிப்ப

தான ஒரு தீபத்தைப் பார்த்து, அஹோ! இந்த தீபத்தினுடைய ப்ரகாசமல்லவா இந்த ஐந்து சுவர்களிலும் அடித்து ப்ரகாசிக் கின்றது! நாம் இவ்விதம் ஊக்கத்துடன் உள்ளே வந்து பார்க்கா விடில் ஐந்து சுவர்களே ப்ரகாசிக்கின்ற வஸ்துக்கள் என்றல்லவா ப்ரஹ்மத்தை அடைவோம்! இத்தீபம் ஒன்றுதான் இவ்விடத் தில் ப்ரகாசிக்கின்ற வஸ்து. நான் உள்ளே வந்தது நலமா யிற்றல்லவா? உட்சென்று பார்க்கிறவனே விவேகி. ஆச்சரி யம்! இந்த தீபம் அவ்வைந்து அறைகளைக் காட்டிலும் வேறு என்று நிச்சயமாய் புலப்பட்டது. இவ்வைந்து அறைகளும் இந்த தீபத்தால் ப்ரகாசிக்கத்தகுந்த வஸ்துக்கள். இவ்வைந்து அறைகளுக்கும் இந்த தீபம் ஒன்றுதான் ப்ரகாசக வஸ்து. ப்ரகாசக வஸ்துவில்லாமல் ப்ரகாசிக்கத் தகுந்த வஸ்துக் களுக்கு ஸ்வயமாகவே ப்ரகாசம் ஸ்பூர்த்தியில்லையல்லவா? ஆகையால், இவைகளில் இந்த தீபம் ஒன்றுதான் ப்ரகாச மான வஸ்துவானதால் உண்மையான பொருள் இதற்கப்பாலோ வொன்றையும் காணோம். இதுதான் கடைசி எல்லையாக வும் தெரிய வருகிறது என்ற ஸ்வானுபவத்தால் ஐந்து அறை களைக் காட்டிலும் வேறாக தீபம் என்ற ப்ரகாசக வஸ் துவைக் கண்டுபிடித்து எவ்விதம் மேன்மையை அடைவானோ ஒருவன் அவ்வாறே மாயையினுடைய *(மண்ணுக்குச் சமமான தமோ குணத்தால்)* பஞ்ச பூதங்கள் ச்ருஷ்டிக்கப்பட்டு அவை களுடைய கூட்டங்களாகிற இச்சரீரமாகிற மண் சுவராகிற அறையைக்காட்டிலும் மாயையின் *(சிவப்பான வர்ணத் திற்குச் ஸமானமான ரஜோ குணத்தில்)* நின்றும் உண்டான இந்த்ரியங்களுடைய கூட்டங்களாகிற சிவப்பு வர்ணமுடைய கண்ணாடியைப் போல் விளங்கி வரும் ப்ராண கோசத்தைக் காட்டிலும், மாயையினுடைய அழுக்குள்ள வெள்ளை நிறத் திற்கு ஸமானமான மலின ஸத்வ வர்ணத்தினுடைய காரிய மான மனதாகிற அழுக்குடைய கண்ணாடியால் செய்யப் பட்ட அறையைப் போல் விளங்கிவரும் மனோகோசத்தைக் காட்டிலும், மாயையினுடைய சுத்தமான வெள்ளையைப் போல் இருக்கிற சுத்த ஸத்வ குணத்தினுடைய காரியமான

புத்தியாகிற சுத்தமான வெள்ளை நிறமுள்ள கண்ணாடியால் செய்யப்பட்ட அறையைப்போல் விளங்கிவருகிற விக்ஞான கோசத்தைக்காட்டிலும், தமோகுணம் ரஜோ குணம் அடங்கி கேவலம் ஸத்வ குணம் மாத்திரம் மேலிட்டு ஸ்படிகம் போல் ப்ரகாசமான அவித்யையாகிற மனதினுடைய பரிணாமத்தில் அடித்துவரும் ஆனந்த ப்ரதிபிம்பமாகிற ஸ்படிக சிலையால் செய்யப்பட்ட அறையைப்போல் விளங்கி வருகிற ஆனந்தகோசத்தைக் காட்டிலும், ஸ்வப்ரகாசமான ஆத்மா நான் வேறுபட்டவன். இவ்வைந்து கோசங்களும் நானல்ல; இவ்வைந்து கோசங்களும் என்னால் ப்ரகாசிக்கத் தகுந்த வஸ்துக்கள்; நான் ப்ரகாசகன். எவ்விதம் ஐந்து அறைகளுக்கும் அதற்குள்ளிருக்கும் தீபத்திற்கும் ஒருவிதமான ஸம்பந்தமில்லையோ, அவ்விதமே இந்த ஐந்து கோசங்களுக்கும் எனக்கும் ஒரு விதமான ஸம்பந்தமுமில்லை. நான் அஸங்கன். என்னிடத்தில் இவ்வைந்து கோசங்களும் கற்பிக்கப்பட்டன; என் ஸ்வரூபம் ஒன்றே உண்மை; ஐந்து கோசங்களின் ஸ்வரூபம் விசாரிக்கப் பொய். ஐந்து கோசங்கள் திருச்யம் *(அறியத் தகுந்தது)*. நான் த்ரஷ்டா *(அறிகிறவன்)*. அவைகள் அநித்யம். நான் நித்யம். அவைகள் கல்பிதம், நான் அதிஷ்டானம். அவைகள் அசுத்தம். நான் சுத்தன். இவ்வாறு அவைகளுக்கும் எனக்கும் அநேக விதம் வித்தியாஸம் இருக்குங்காலத்தில் அவைகளாக நான் எவ்விதம் ஆகுவேன். ஆகையால், அவைகள் நானல்ல. அவைகளைக் காட்டிலும் நான் வேறு என்னும் திவ்யானுபவமும் எவனுக்கு *(அதாவது இவ்விதமான அநுபவத்தில் ஜாதி, குலம், ஆச்ரமம் இவைகள் ஆவசியகமில்லாமலே யாராயிருந்தாலும் அநேக ஜன்மாவில் அடிக்கடி இவ்விதமான திவ்யாநுபவத்தை அநுபவித்து இந்த த்ருட வாஸனையால் இந்த ஜன்மாவில் ஒருவனுடைய உபதேசத்தை அபேக்ஷிக்காமலே காமாதிகள் எப்படி ப்ரகாசிக்கின்றதோ, அவ்விதமே, மேற்சொன்ன திவ்யானுபவம் குருவினுடைய உபதேசத்தையோ, சாஸ்த்ரத்தையோ அபேக்ஷிக்காமலே எவனுக்கு)* உண்டானாலும் அவன் மேலான ப்ராஹ்

மண குலத்தில் பிறந்தவனாயிருந்தாலும் அல்லது மிகவும் கீழான சண்டாள குலத்தில் பிறந்தவனாயிருந்தாலும் அவன், ஜாதி, வர்ணாச்ரமத்திற்குட்பட்டவனல்ல. நித்யமாயும், நிரதிசய ஆனந்த வடிவாயும், சுத்தமாயும், இந்த ஜகத்திற்கு அதிஷ்டானமாயும், ஸர்வ ஸாக்ஷியாயும், நிர்விகாரியாயும், வேதாந்த வேத்யமாயும், மாய விலக்ஷணமாயும், விளங்கி வரும் ப்ரஹ்மமேதான் அவன். அன்றி வேறில்லையென்று பாவிப்பதோடுகூட

गु-शब्दस्त्वन्धकारः स्यात् रु-शब्दस्तन्निरोधकः ।
अन्धकारनिरोधित्वाद्गुरुरित्यभिधीयते ॥

गु-शब्दः, गु என்ற சப்தமானது; अन्धकारः, அஞ்ஞானமாகிற இருளாக; स्यात्, ஆகிறது; रु-शब्दः, रु என்ற சப்தமானது; तन्निरोधकः, அஜ்ஞானமென்ற இருளைப் போக்கடிக்கிறதாக; स्यात्, ஆகிறது; अन्धकारनिरोधित्वात्, அஞ்ஞானமாகிற இருளைப் போக்கடிக்கின்ற தன்மையினாலேதான்; गुरुः, குரு; इति, என்று; अभिधीयते, சொல்லப்படுகிறது என்றபடி). ஸகல ஜீவகோடிகளின் அஞ்ஞானமாகிற இருட்டைப் போக்கடித்து தத்வோபதேசத்தால் ஸகல ஜீவகோடிகளையும் க்ருதார்த்தர்களாகச் செய்யக் கூடிய கருணைக்கிருப்பிடமான பரமகுருவென்றே என் ஸித்தாந்தம்.

மேற்கண்ட ச்லோகத்தால் ஸகல ஜகத்திலும் அந்தர்யாமியான சித்ரூபமான ப்ரஹ்மம் எதுவோ அதுவேதான் நான் என்ற அனுபவமானது ஜீவ ப்ரஹ்ம ஐக்ய தத்வத்தை விளக்குகிறது. அது மிகவும் தப்பு. ப்ரஹ்மமோ ஸகல ஜகத்திற்கும் காரணம்; ஜீவனோ தன் ஸ்வாதந்த்ரியத்தோடு ஒன்றையும் செய்யக்கூடாதவன். ப்ரஹ்மமோ ஸர்வத்தையும் அறியும் தன்மையுள்ளது. ஜீவனோ அதற்கு நேர் விபரீதமுள்ளவன். இவ்விதமிருக்க ஒன்றோடொன்று விபரீதஸ்வபாவமுள்ள இருட்டுக்கும் ப்ரகாசத்திற்கும் எவ்விதம் ஐக்யம் கிடையாதோ அவ்விதமே விருத்த ஸ்வபாவமுள்ள ஜீவனுக்

கும் ப்ரஹ்மத்திற்கும் எவ்வாறு ஐக்கியம் ஏற்படும்? அவ்வித ஐக்கிய அனுபவத்தை எவ்விதம் பூர்வ ச்லோகத்தில் சாஸ்த்ர ஸம்மதம் போல் கூறப்பட்டது? இவ்விதமான ஆக்ஷேபணை களுக்கு ஸமாதானம் தெரியும். ஸகலமான ஜகத்தும் ப்ரஹ்மத் தினிடத்தில் கல்பிதமானபடியால் ப்ரஹ்மத்தில் ஜகத்தை கல்பித்தவனான நானும் ப்ரஹ்மத்தினிடத்தில் கல்பிக்கப் பட்டவனாதலால் கல்பிதமான வஸ்துக்களுக்கு அதிஷ்டான ஸ்வரூபத்தைத் தவிர, வேறு ஸ்வரூபம் இல்லாதபடியால் நான் ப்ரஹ்மமே என்ற ஜீவ ப்ரஹ்ம ஐக்கிய அனுபவத்தை மேற்கண்ட ச்லோகத்தில் காட்டியது சாஸ்த்ர ஸம்மதமே யாகும். கல்பிதமான ஜகத் கர்த்ருத்வம் ப்ரஹ்மத்திற்கு எவ் விதமோ அவ்விதமே ஜீவனுக்கு ஸ்வாப்னமான ஜகத் கர்த்ருத்வம் உண்டல்லவா? எவ்விதத்திலும் ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கும் விருத்த ஸ்வபாவமே கிடையாது. இவ் விதமான அபிப்ராயங்களை அனுஸரித்தல்லவா மஹா வாக்யங்களும் ஜீவனுக்கு ப்ரஹ்ம பாவத்தைப் போதிக் கின்றது. ஆகையால், மஹா வாக்யங்களுடைய உண்மை யான ஸித்தாந்தம் எதுவோ, அதே ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றென்பதுதான். அதுதான் மேற்கண்ட ச்லோகத்திலும் கூறப்பட்டது. அவ்விதமான ஜீவ ப்ரஹ்ம ஐக்யம் என்ற ஸித்தாந்தம் சாஸ்த்ர ஸம்மதம்தான் என்று விவரித்து நன்றாய்க் காட்டுவதோடுங்கூட அதற்கு விபரீதமான மதங் களுக்கு சாஸ்த்ரம் சற்றேனும் இடங்கொடுக்காது என்பதை யும் நன்றாய்க் காட்டுகிறார் இந்த ச்லோகத்தால்.

ब्रह्मैवाहमिदं जगच्च सकलं चिन्मात्रविस्तारितं
सर्वं चैतदविद्यया त्रिगुणया सेशं मया कल्पितम् ।
इत्थं यस्य दृढा मतिः सुखतरे नित्ये परे निर्मले
चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ॥ २

चिन्मात्रविस्तारितम्, சித்ரூபமான ப்ரஹ்மத்தினிடத்தில் கல்பிக்கப் பட்டதான; इदं, இந்த; सकलम्, ஸமஸ்தமான;

जगच्च, ஜகத்தும்; ब्रह्मैव, பரப்ரஹ்மஸ்வரூபம் தான்; यतः, யாதொரு காரணத்தால்; त्रिगुणया, ஸத்வ குணம், ரஜோ குணம், தமோ குணம் என்ற மூன்று குணத்தோடு கூடின; अविद्यया, அவித்யையான ஸாதனத்தாலே; मया, என்னால்; एतत्, இந்த; सर्वं च, ஸகலமான ஜகத்தும்; सेशं, ஈசுவரனோடு கூட; कल्पितम्, கற்பிக்கப்பட்டதோ; अतः, ஆகையால்; अहं, நான்; ब्रह्मैव, ப்ரஹ்மம்தான்; इत्थं, இந்த ப்ரகாரம்; सुखतरे, அளவற்ற ஆனந்த ரூபமாயும்; नित्ये, அழிவற்றதாயும்; परं, மாயையைக் காட்டிலும் வேறாயும்; निर्मले, மலமற்றதாயும் இருக்கிற ப்ரஹ்மத்தினிடத்தில்; यस्य, எவனுக்கு; मतिः, புத்தியானது; दृढा, அழிக்க முடியாததாக; भवति, ஆகிறதோ; स तु, அவனோ என்றால்; चाण्डालः, சண்டாள குலத்திலுண்டானவனாகவோ; द्विजः, ப்ராஹ்மணனாகவோ; अस्तु, இருக்கட்டும்; सः, அவன்; मम, எனக்கு; गुरुः, ஆசார்யன்; इति, என்று; एषा, இந்த; मनीषा, நிச்சயம்.

கிளிஞ்சலில் கல்பிதமான வெள்ளியானது உண்மையில் விசாரிக்க கிளிஞ்சலாகவே ஏற்படுவதுபோல், சித்ரூபமான ப்ரஹ்மத்தினிடத்தில் ஜீவனான என்னால் கல்பிக்கப்பட்ட இந்த ஸகல ஜகத்தும் விசாரித்தால் ப்ரஹ்மமாகவேதான் உண்மையில் முடியும். ஆனால், கிளிஞ்சலில் தோன்றிய வெள்ளியானது கிளிஞ்சலைக்காட்டிலும் வேறாக இல்லாவிடினும், அந்த வெள்ளியை கிளிஞ்சலில் கல்பித்த புருஷன் கிளிஞ்சலைக் காட்டிலும் வேறாக ஏற்படுகிறான் என்பது போலவே சித்ரூபமான ப்ரஹ்மத்தினிடத்தில் கல்பிக்கப்பட்ட இந்த ஜகத்தானது அதிஷ்டானமான ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுபடாமல் ப்ரஹ்ம ரூபமாகவே ஆனாலும், அந்த ஜகத்தை, ப்ரஹ்மத்தினிடத்தில் கல்பித்த ஜீவன் வேறாக இருக்கிறான் அல்லவா? தவிர, கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி ப்ராதிபாஸிகம் *(அதாவது அக்காலத்தில் கிளிஞ்ச*

னுடைய தெரியாத்தன்மையான அக்ஞானத்தால் உண்டாகி ஒரு புருஷனால் கிளிஞ்சலில் கல்பிக்கப்பட்டது). ப்ரஹ்மத்தில் தேன்றும் ஜகத்தோ அவ்விதமல்ல. இது வ்யாவஹாரிகம், உண்மையாய் விசாரிக்க அழிவதாய் இருந்தாலும் வ்யவஹார காலத்தில் அழியாது. கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியோ வ்யவஹார காலத்திலேயே அழிந்து விடுகிறது. அதற்கும் இதற்கும் ஸாம்யம் சொல்வது தப்போடுகூட இவ்விடத்தில் இந்த ஜகத்திற்குக்கர்த்தாவான மாயையோடுகூடின ஈச்வரனென்றவனான கர்த்தாவொருவன் இருந்து வருகிறான். ஆகையால், ஜகத்து ப்ரஹ்மத்தில் கல்பிக்கப்பட்டு ப்ரஹ்மமாகவே ஆனாலும், ஜகத்தை கல்பித்த ஜீவன், கல்பிதமான ஜகத்திற்குக் கர்தாவான ஈசன், அதிஷ்டானமான ப்ரஹ்மம் இந்த மூன்று தத்வம் உண்மையிலும் மிச்சமாக ஸித்திக்குமானபடியால் அத்வைத ஸித்தாந்தம் எவ்விதம் ஏற்படும் என்ற ஆக்ஷேபணைகளுக்கு ஸமாதானமோ அடியிற்கண்டவாறு கூறப்படும். அதாவது கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியைப் போல்தான் இந்த ஜகத்தும் ப்ரஹ்மத்தில் தோன்றுகிறதே தவிர, அதற்கும் இதற்கும் ஒரு விதத்திலும் வித்யாஸம் இல்லை. கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியும், கிளிஞ்சலைத் தெரிந்துகொண்ட மாத்ரத்தில் எவ்விதம் போகிறதோ, அவ்விதமே, ப்ரஹ்மத்தில் தோன்றுகிற ஜகத்தும் ப்ரஹ்மத்தைத் தெரிந்துகொண்ட மாத்ரத்தில் போவதில் ஆக்ஷேபணை இல்லை. கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியை உண்டு பண்ணினது கிளிஞ்சல் மாத்ரமுமில்லை. கிளிஞ்சலினுடைய அக்ஞானம் மாத்ரமுமில்லை. ஆனால், அக்ஞானத்தோடு கூடின கிளிஞ்சல். எவ்விதம் கிளிஞ்சலில் வெள்ளி கல்பிதமோ, அவ்விதமே, அந்த வெள்ளியை உண்டு பண்ணின அக்ஞானத்துடன் கூடின கிளிஞ்சலும் சுத்தமான கிளிஞ்சலில் கல்பிதமல்லவா? கிளிஞ்சலின் உண்மையைத் தெரிந்து கொண்ட மாத்ரத்தில் கிளிஞ்சலில் தோன்றின வெள்ளியைப் போல் அந்த வெள்ளியை உண்டு பண்ணின அக்ஞானத்துடன் கூடின கிளிஞ்சலும் மறைந்து விடும். அது போலவே

அந்த ப்ரஹ்மத்தில் தோன்றும் ஜகத்தை உண்டு பண்ணினது, ப்ரஹ்மம் மாத்ரம் இல்லை. ப்ரஹ்மத்தைத் தெரிந்து கொள்ளாத தான அக்ஞானம் மாத்ரமுமில்லை. அக்ஞானத்தோடு கூடின ப்ரஹ்மம் உண்டு பண்ணினது. அதுதான் மாயா *(சபளித)* ப்ரஹ்மமென்றும், ஈச்வரனென்றும் கூறப்படும். ப்ரஹ்மத்தின் உண்மையைத் தெரிந்த மாத்ரத்தில், ப்ரஹ்மத்தில் கல்பித்த ஜகத் எவ்விதம் மறைகிறதோ, அவ்விதமே அந்த ஜகத்தை உண்டு பண்ணின மாயா சபளிதமான ப்ரஹ்மமென்ற ஈச்வரனும் சுத்த ப்ரஹ்மத்தினிடத்தில் கல்பிதமானபடியால் மறைந்தே விடும். ஆனாலும், கிளிஞ்சலில் வெள்ளியைக் கல்பித்த புருஷனானவன் கிளிஞ்சலினுடைய உண்மையைத்தெரிந்து கொண்ட காலத்திலும் மறையாததுபோல் ப்ரஹ்மத்தினிடத்தில் ஜகத்தைக் கல்பித்த கல்பகனான ஜீவனை மறையாமல் இருப்பதாகவே ப்ரஹ்மத்தின் உண்மையைத் தெரிந்து கொண்ட காலத்திலும் ஒப்புக் கொள்ள வேண்டியது ஆவசிகமென்று ஆக்ஷேபிக்கவும் இடமில்லை. ஏனென்றால், கல்பகனான புருஷன் அதிஷ்டானத்தின் உண்மையைத் தெரிந்து கொண்ட காலத்தில் அதிஷ்டான ஸ்வரூபத்தில் மறைந்து விடாமலேதான் இருக்கின்றான் என்ற நியமம் சொல்ல முடியாது. கல்பகனும் அதிஷ்டானத்தில் மறைந்து விடலாம். அதாவது, தேவதத்தன் என்ற ஒரு புருஷன் ஜாக்ரதாவஸ்தையில் தான் ரொம்பவும் தரித்ரனாய் இருந்தாலும் ஸ்வப்னாவஸ்தையில் தான் அநேக விதமான வைபவத்தைக் காண்கிறான். அதாவது **விசாலா** என்ற நகரத்தில் **குலசேகரன்** என்ற பூபதியினுடைய பட்டமஹிஷியான **சாரதாபாய்** என்ற ராஜ ஸ்த்ரீயினிடத்தில் அநேக விதமான உபவாஸாதிகளால் ராஜகுமாரனாய்ப் பிறந்தான். பிறந்து கௌமாராவஸ்தையிலேயே ஸகல ராஜ்யபாரங்களையும் வஹிக்கும்படியான பராக்ரமங்களையும் நீதிகளையும் அப்யஸித்து பிதாவின் மனதிற்கு தன் செய்கையால் அடிக்கடி ஆனந்தத்தை வ்ருத்தி பண்ணிக் கொண்டு வந்தான். குலசேகரன் என்ற ராஜனும் தன் குழந்தையான **மார்த்தாண்ட பூபதி** என்ற குமாரனுக்கு **உஜ்ஜயனீ** என்ற தேசத்தை

ஆண்டு வருகிற ஸ்ரீ க்ருஷ்ண வர்மா என்ற ராஜனுடைய பெண்ணான கமலாபாய் என்றவளை விவாஹம் செய்து வைத்து கொஞ்ச காலம் தான் தன் குமாரனையும் குமார னுடைய பத்னியான கமலரபாயையும் இவ்விருவர்களை யும் பார்த்து, அளவில்லாததான ஆனந்தக்கடலில் மூழ்கி வந்தான். இவ்விதமிருக்க குலசேகரன் என்ற ராஜனும் தனது கடைசி காலத்தில் மார்த்தாண்ட பூபதி என்ற தன் குமார னிடத்தில் ராஜ்யபாரத்தை ஒப்பித்துவிட்டுதான் வனத்தை அடைந்தான். மார்த்தாண்ட பூபதியும் நீதிப்ரகாரம் ப்ரஜை களை பரிபாலனம் பண்ணுவதோடு கூட தனது ராஜ்யத்திற் கருகில் விளங்கிவரும் வேங்கடாத்ரி என்ற ஒரு பெரிய மலையைக்கண்டு இவ்வித மலையால் என்ன ப்ரயோஜனம், இவ்வித மலையையும், மலைக்கருகாமையிலுள்ள காடு களையும் அழித்து ஒரு பெரிய ராஜதானியாய்ப் ப்ரஜைகள் வஸிக்கும்படியாயும், ராஜ்யபாரங்களை நிர்வாஹம் பண்ணக் கூடிய அநேக ந்யாயாதிபதிளுடைய ஸபையை ஏற்படுத்தக் கூடியதாயும் ஏற்பாடு செய்ய வேண்டியது ஆவசிகமென்று, தான் தீர்மானித்து தன் பிதாவான குலசேகரன் காலம் முதல் தன் அரண்மனையில் மந்த்ரி ஸ்தானத்தை வஹித்து வரு கிறவனான ராமசந்த்ர ராவ் என்ற மந்த்ரியை வரவழைத்து தான் தீர்மானித்ததை ஏகாந்தத்தில் சொன்னான்.

மந்த்ரியும் ''ராஜனே! தங்கள் புத்தியில் தோன்றினது ரொம்பவும் நலம்தான். ஆனாலும், இந்த வேங்கடாத்ரி என்ற மலையை அழிப்பது மனிதர்களால் ஸாத்யமோ? இந்த மலையினுடைய சிகரம் எவ்வளவு உயரமுள்ளதென்று கண்டுபிடிக்க தங்கள் பிதா ராஜ்ய பரிபாலனம் பண்ணி வரும் காலத்திலேயே நானும் அவர்களும் அதைக் கண்டு பிடிக்க ஒரு வருஷத்திற்கு நமது ராஜதானியில் வரக் கூடிய வரும்படியான ஏழு கோடியையும் அதற்காக சாங்க்ஷன் செய்து அநேக மாந்த்ரீகர்கள் மூலமாகவும் ஸித்தர்கள் மூல மாகவும் லௌகீக உத்யோகஸ்தர்கள் மூலமாகவும் யத்னம்

செய்து ஏழு கோடி ரூபாய் வீணாய் செலவழிந்தது மாத்ரம் பலனே தவிர, சிகரத்தினுடைய உயரத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்பது தங்களுக்குத் தெரிந்த விஷயமே! இவ்விதமான மலையின் சிகரத்தில் அநேக தேவர்களுடைய ஸ்தானங்களும் இருப்பதாக ஸித்த புருஷர்கள் மூலம் தெரிய வருகிறது. இவ்விதமிருக்க, இம்மலையை அழிப்பது நம்மால் ஸாத்யமோ? ராஜன்! தீர்மானித்தது ரொம்பவும் உசிதம்தான். பெரிய ராஜதானியாய் இருந்தால் அநேக கார்யங்களுக்கு ஸௌகர்யமல்லவா? ஆனால், அது ஸாத்ய மான கார்யமென்று எனக்குத் தோன்றவில்லை. தவிர, அம் மலையில் ரொம்பவும் அருமையான 'கந்தஹஸ்தீ' என்ற பெயருடன் கூடிய மத்தகஜங்கள் *(மதம் பிடித்த யானைகள்)* அநேகங்களாக ஸஞ்சரித்து வருகின்றன. மாதந்தோறும், நம்மால் ஏற்படுத்தப்பட்டுள்ள யானை விழுங்குழியில் நாலு ஐந்து யானைகளுக்குக் குறையாமல் யானைகள் அகப்பட்டுக் கொண்டு வருகிறதல்லவா? ஒவ்வொரு யானையும் சுமார் 5000 பவுனுக்குக் குறைந்ததான யானையே இல்லை. இவ் வித மலையை அழித்து விட்டு ராஜதானியாய் கல்பித்து விட் டால், மாதந்தோறும் இவ்விதமான லாபத்தை எவ்விதமடை வோம். தவிர, கண்காக்ஷிகளுக்குத் தகுந்த அநேக வ்ருக்ஷங் களும், அநேக ம்ருகங்களும், அநேக வைபவங்களுமுள்ள மலைகளை, ராஜன் அழிக்க நினைப்பது உசிதமோ? மற்ற ராஜர்கள் தன் ராஜ்யத்தில் ஒரு சிறு மலை அகப்பட்டால் போதுமென்று தபித்து வருகின்றார்கள். நாம் இருக்கும் மலையை அழிக்க யத்னம் செய்கிறோம். இதென்ன ராஜ நீதி? ராஜனே! இந்த எண்ணத்தை இந்த நிமிஷத்திலேயே விட்டு விட வேண்டும்'' என்று ராமசந்த்ரராவ் என்ற மந்த்ரி யானவன் உபதேசிக்க மார்த்தாண்ட பூபதி என்ற ராஜன் தனது அபிப்ராயத்திற்கு விரோதமாய்ச் சொல்லும் இந்த மந்த்ரியை நமது ராஜ்யத்தில் வைத்துக் கொள்வது இனி உசித மில்லை என்று அந்த நிமிஷமே அந்த மந்த்ரியை ராஜ்யத்தை விட்டு விலக்கி விட்டு விஷ்ணுசர்மா என்ற பெயருடைய

வனும் கொஞ்ச காலமாக தன் ராஜ்யத்தில் திவான் பேஷ்காரா யிருந்தவனையும் மந்த்ரியாக கல்பித்துக் கொண்டு தான் எண்ணின ப்ரகாரமே வேங்கடாத்ரி என்ற மலையை அழித்து ராஜ தானியாய்ச்செய்ய யத்னம் செய்தான். அநேகவிதமான பீரங்கி முதலான ஆயுதங்களால் மலைகளை உடைத்து ஒவ்வொரு பாறைகளையும் யந்த்ரங்களால் அருகிலுள்ள ஸமுத்ரத்தில் போகும்படி செய்து கொண்டு, தினந்தோறும் லக்ஷம் கூலியாட்களும் பீரங்கி முதலான யந்த்ரங்களும் அதற்கு சிலவிற்காக பிரதி தினம் லக்ஷம் பவுன்களும் இவ்விதமான ஆடம்பரங்களோடு பன்னிரண்டு வருஷ காலமாக இந்த மலையை உடைத்து வந்தான் இந்த ராஜன். இவ்விதமிருக்க பதின்மூன்றாவது வருஷத்தில் மலையை உடைத்து வருகிற ஸமயத்தில் அந்த மலையில் கீழ்ப் பக்கத்தில் ஒரு குஹையில் வெகு நாளாய் தபஸை செய்து வருகிற வரதந்து என்ற ஒரு மஹர்ஷியினுடைய அருகில் ஒரு பீரங்கி குண்டு போய் விழ அவர் ஸமாதியில் நின்றும் விழித்துக் கொண்டு பரம கோபத்துடன் ஹுங்காரம் செய்து கொண்டு, "யார் ப்ராஹ்மண ஹிம்ஸகனான ராஜா?" என்ற சப்தத்தை உயர்ந்த ஸ்வரத்தோடு சொல்லி விட்டு, தன் தபோ பலத்தால் ஒரு பைசாசத்தை ச்ருஷ்டித்து "ப்ராஹ்மண ஹிம்ஸகனான ராஜனுடைய குலத்தை த்வம்ஸம் பண்ணி வா" என்று ஆக்ஞாபித்தார். அந்த பைசாசமும் பயங்கரமான ரூபத்துடன் அந்த மலையை ஹிம்ஸித்து வரும் ஸகல வேலைக்காரர்களையும் த்வம்ஸம் செய்து ராஜனையும் ஹுங்காரத்தால் பயத்தை உண்டு பண்ணிக் கொண்டு துரத்திற்று. அந்த பைசாசத்திற்கு எதிரில் நிற்க முடியாமல் ராஜனும் ஊரூராக ஓடி, ஓரிடத்திலும் தன்னை ரக்ஷிக்கிற மஹானைக் காணாமல் அந்த வரதந்து மஹரிஷியினுடைய காலிலேயே சரணமடைந்தான். வரதந்து என்ற மஹரிஷியும் சரணாகதி அடைந்தவனை ரக்ஷிக்க வேண்டுமென்று சாஸ்த்ரத்தை அனுஸரித்து அந்த பைசாசத்தைத் தன் தபோ பலத்தால் மறையும்படிச் செய்து விட்டார். ராஜனே! உன் பணத்தினுடைய அஹங்காரத்

தால் அல்லவா? உன் மந்த்ரியால் சொல்லப்பட்ட ஹிதத்தையும் கேட்காமல் மந்த்ரி ஸ்தானத்திற்கு யோக்கியதையில்லாத ஒருவனை மந்த்ரியாக பாவித்துக் கொண்டு ஹிதோபதேசம் செய்த மந்த்ரியையும் ராஜ்யத்தினின்று விலக்கி விட்டு இவ்விதம் மஹர்ஷிகளை ஹிம்ஸிக்கக் கூடிய காரியத்தில் நீ ப்ரவேசித்தாய்? ஆகையால் (असतः श्रीमदान्धस्य दारिद्र्यंपरमाञ्जनं)

श्रीमदान्धस्य, தனத்தினுடைய மதத்தால் பொட்டையான; असतः, மூர்க்கனுக்கு; दारिद्र्यम्, தரித்ரத்தால் கஷ்டப்படும் தன்மையே; परमाञ्जनं, ச்ரேஷ்டமானவை.

*(பணமாகிற பித்த நீரால் மறைக்கப்பட்ட மூளையாகிற கண்ணுள்ளவனுக்கு தாரித்ரியம் என்ற குளிகைதான் மருந்தென்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து)* ராஜனே! நீ இந்த நிமிஷமே தரித்திரனாய் போகக்கடவது என்று சபித்தார். அந்த நிமிஷமே **அவந்தீ** என்ற தேசத்திற்கு அதிபதியான **ஸ்ரீ கோபாலவர்மா** என்ற பூபதி இவன் *(மார்த்தாண்ட பூபதியின்)* ராஜ்யத்தை ஆக்ரமித்துக்கொண்டு தன் ராஜதானியாய்ச் செய்துகொண்டான். இந்த **மார்த்தாண்டபூபதியும்** மஹரிஷியினுடைய சாபத்தால் பரம தாரித்ரிய தசையை அடைந்து, தனக்கு இருந்த ராஜதானி போராமல் ஸித்தர்கள் வஸிக்கும் மலையை அழித்து ராஜதானியாக்க வேண்டுமென்ற பேராசையால், இருக்கும் ராஜதானியையும் இழந்து பரம கஷ்டத்தை அனுபவிக்கும்படியான பாபியாய் ஆனான். இவ்விதமிருக்க, அரண்யத்தில் வேடர்களுடைய கூட்டத்தில் தானும் ஒரு வேடனாகச் சேர்ந்து கொண்டு வெகு காலமாய் விறகு வெட்டி ஜீவனம் செய்து வந்தான். ஒரு ஸமயம் தான் தனியாய் காட்டில் விறகு வெட்டப் போகும் காலத்தில் ஒரு புலியானது தன்மேல் பாய்ந்து தன்னை ஹிம்ஸித்தகாலத்தில், தான் ரொம்பவும் வ்யஸனத்தை அடைந்தான்.

இவ்விதமிருக்க, ஸ்வப்னாவஸ்தை தெளிந்து முழிப்பு வந்து விட்டது. மேற்கண்ட ஸ்வப்னாவஸ்தையில் கண்ட

ஸகல வைபவங்களும் தனது ஆத்மாவில் கல்பிக்கப்பட்ட தல்லவா? முழித்துக் கொண்டவுடன் ஸ்வப்னாவஸ்தையில் கல்பிக்கப்பட்ட ஸகல வைபவங்களும் தனது ஆத்ம ஸ்வரூ பத்தைக் காட்டிலும் வேறாய்த் தோன்றுகிறதோ, ஸ்வப்னா வஸ்தையில் இந்த ஸகல வைபவங்களையும் கல்பித்த கல்பகனான மார்த்தாண்டபூபதி என்ற ராஜனும் ஜாக்ரதா வஸ்தையில் மறைந்து போய்விடுகிறானல்லவா? (வாஸிஷ் டம்). ஆகையால், கிளிஞ்சலில் வெள்ளி தோன்றுமிடத்து, கிளிஞ்சலினுடைய உண்மையைத் தெரிந்த காலத்தில் வெள்ளி மறைந்தாலும், வெள்ளியைக் கல்பித்த புருஷன் மறையவில்லையே என்றாலும், ஸ்வப்னாவஸ்தையில் ஆத்மாவில் கல்பிக்கப்பட்ட ஸகல வைபவங்களும், அந்த வைபவங்களை கல்பித்த கல்பகனும் ஜாக்ரதாவஸ்தையில் மறைந்து விடுகிறதென்பது அனுபவ ஸித்தமல்லவா? ஆகை யால், கல்பிதம், அதிஷ்டானத்தைத் தெரிந்து கொண்ட திசை யில் மறையுமே தவிர, கல்பகன் மறைய மாட்டான் என்ற ஆக்ஷேபணை சற்றேனும் ஒப்புக்கொள்ளத் தகுந்ததல்ல. அவ்விதமே, என்னால் ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் கல்பிக்கப் பட்ட ஈச்வரனோடு கூடின இந்த ஜகத்தானது ப்ரஹ்ம ஸாக்ஷாத் கார தசையில் மறைந்து விடுவதுபோல், அதைக் கல்பித்த நானும் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரதசையில் மறைந்து ப்ரஹ்மத்தின் உருவமாகவே ஆகி விடுவேன். ஆகையால், நான் ப்ரஹ்மம் தான், அதிஷ்டானமாகிற ப்ரஹ்மத்தைக்காட்டிலும் நான் வேறுபட்டவனல்ல என்ற ப்ரகாரம் அளவற்ற ஸுகரூப மாயும், அழிவற்றதாயும், எல்லாவற்றிற்கும் மேலாயும், அஞ்ஞானமாகிற இருட்டோ, அதின் கார்யமாகிற ஜகத்தோ, இவ்விதம் இரண்டுவிதமான மலங்களற்றதாயுமிருக்கும் ப்ரஹ்ம ஸ்வரூபத்தினிடத்தில் ஒரே நிலையான புத்தியானது எவனுக்கிருந்தாலும், அவன் இன்ன ஜாதியில் பிறந்தவன், இந்த குலத்தில் ஜனித்தவன் என்ற வித்யாஸங்கள் அற்றதான ப்ரஹ்மம் என்றே தீர்மானிக்க வேண்டும்.

भावनादर्शने हित्वा स्वयं केवलरूपतः ।
यस्तिष्ठति स तु ब्रह्मन् ब्रह्म न ब्रह्मवित्स्वयम् ॥

भावनादर्शने, த்யானம், அனுபவம் இவ்விரண்டுகளையும்; हित्वा, விட்டு; स्वयं, தான்; केवल रूपतः, கேவல ஸ்வரூபமாக; यः, எவன்; तिष्ठति, இருக்கின்றானோ; सतु, அவனோ என்றால்; ब्रह्मन्, ஹே ப்ரஹ்மாவே; ब्रह्म, பரப்ரஹ்மம்தான்; स्वयम्, தான்; ब्रह्मवित्, ப்ரஹ்மத்தை அறிந்தவன் என்றதாக; न, இல்லை.

என்ற ஸ்மிருதியாலும் வாஸ்தவமான ப்ரஹ்ம ஸாக்ஷாத் காரத்தை அடைந்தவன் பரப்ரஹ்மமென்றே தீர்மானிக்க வேண்டும். ஆகையால், மேற்சொன்ன அநுபவம் எவனுக்கிருக் கிறதோ அவன் ப்ராம்மணன், சண்டாளன் என்ற வித்யாஸத் திற்கு உட்பட்டவனாக ஆகாதபடியாலும், கேவல ப்ரஹ்ம ரூபமானபடியினாலும், அவனே ஆசார்யனென்று என் நிச்ச யம். எவ்வளவு காலம் ஜீவபாவம் போகவில்லையோ அவ்வள வுக்குள் வர்ணாச்ரமத்தால் பேதம் ஏற்படுமே தவிர, ஜீவ பாவம் போன பிற்பாடு இவ்விதமான பேதம் அற்றுப்போகு மல்லவா? அதாவது,

केऽयं दुर्नीतिरेषा वद भवति कदा वास्ति किं नौ विभागः
दैवादैश्वर्यमाप्तं निरवधि भवता किं न तत्भोक्तृता मे ।
तत्कुर्वेतन्न कुर्वित्यपि वदसि समं पश्य नो चेत्
कूटस्थे त्वां निवेद्य स्थिरमपि भवदैश्वर्यमुन्मूलयामि ॥

भवति, உம்மிடத்தில்; इयम्, இந்த; दुर्नीतिः, நீதிக்கு விரோத மான தன்மையானது; का, என்ன; नौ, நம்மிருவர்களுக்கும்; विभागः, பாகமானது; कदा वा, எப்பொழுதாவது; अस्ति किं, ஆயிற்றா; दैवात्, பரப்ரஹ்மத்தினிடத்தில் நின்றும்; निरवधि, அளவற்றதான; ऐश्वर्यम्, ச்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோ தானம், அனுக்ரஹம் என்ற ஐந்து விதமான ஈசத் தன்மை

யானது; आसम्, அடையப்பட்டதல்லவா; तत्, அவ்விதமான ஐச்வர்யத்தை உத்தேசித்து; भोक्तृता, புஜிக்கும் தன்மை யானது; मे, எனக்கு; किं, ஏன்; न, இல்லை; तत्, அதை; कुरु, செய்; एतत्, இதை; न कुरु, செய்யாதே; इत्यपि, இந்தப் ப்ரகார மும்; वदसि, சொல்லுகிறாய்; माम्, என்னை; समम्, சமமாக; पश्य, பார்!; ईश, ஈச்வரனே; नो चेत्, அவ்விதம் செய்யாது போனால்; कूटस्थे, சுத்த ப்ரஹ்மத்தினிடத்தில்; त्वां, உன்னை; निवेद्य, தெரியப்படுத்தி; स्थिरमपि, வெகுகாலம் இருக்கக் கூடிய தானாலும்; भवदैश्वर्यम्, உன் ஸம்பத்தை; उन्मूलयामि, அழியும் படி செய்து விடுவேன்.

அதாவது, ஒரு தேசத்தில் ஒரு ப்ராம்மணன் ஸாத்விகீ யான தன் மனைவியிடத்தில் இரண்டு புத்ரர்களைப் பெற் றான். அதில் முந்தினவனுக்கு விஷ்ணுமித்ரன் என்றும் இளைய வனுக்கு ஹிமமித்ரன் என்றும் பெயர். விஷ்ணுமித்ரனுக்கு இருபத்தைந்தாவது வயது நடக்கும் பொழுது ஹிமமித்ர னுக்கு பதினோராவது வயது நடந்து வந்தது. அந்த ஸமயத் தில் அந்தக் குழந்தைகளுக்குப் பிதாவான ப்ராம்மணன்,

धर्मतः सुतमुत्पाद्य वनं गच्छेत् जितेन्द्रियः

धर्मतः, தர்மமாக; सुतम्, புத்ரனை; उत्पाद्य, உண்டு பண்ணி; जितेन्द्रियः, ஜயிக்கப்பட்ட இந்த்ரியத்தை உடையவனாய்க் கொண்டு; वनम्, அரண்யத்தை; गच्छेत्, அடைய வேண்டும்)

என்ற சாஸ்த்ரத்தை அனுஸரித்து வானப்ரஸ்தாச்ரமத்தை அடையவேண்டுமென்று எண்ணினான். அவ்விதமெண்ணி, தனக்குள்ள சொத்துக்களை ஜேஷ்ட குமாரனான விஷ்ணு மித்ரனிடத்தில் கொடுத்து கனிஷ்ட புத்ரனான ஹிமமித்ரனை யும் அவனிடம் ஒப்புவித்த, ஹிமமித்ரன் மேஜராய் வந்த வுடன் உனக்கு ஸமானமாய் அவனை நினைத்து உன் ஸொத் தில் அவனுக்கும் சரியான பாகம் கொடுத்து, அவனை பரி

பாலிக்க வேண்டியது உன் கடமை என்றும் ஜேஷ்ட புத்ரனை நியமனம் செய்து விட்டு அரண்யத்தை அடைந்தான். உடனே ஜேஷ்ட புத்ரன் தன் மனைவியோடு ஸகல சொத்துக்களுக் கும் யஜமானனாயிருந்துகொண்டு தன் தம்பியான ஹிம மித்ரனை சில கார்யங்களைச் செய்யென்று ஏவுகிறதும் சில காரியங்களைச் செய்யக் கூடாதென்று தடுக்கிறதும் இவ் விதம் நியமனம் செய்து கொண்டு வந்தான். இவ்விதமிருக்க, காலக்ரமமாக ஹிமமித்ரனென்ற கனிஷ்டனும் மேஜராய் மனைவியோடு கூடினவனாய் ஆனான். அச்சமயத்திலும் ஹிமமித்ரனை விஷ்ணுமித்ரன் அநேக விதமான காரியங் களில் கட்டளையிட்டு வந்தான். ஹிமமித்ரன் விஷ்ணுமித் ரனைப் பார்த்துச் சொன்னதாவது ''நீயும் நானும் ஒரே தகப்ப னிடத்தில் பிறந்தவர்கள். அவ்விதமிருக்க நீ என்னை சமமாய் பார்க்காததோடுங்கூட வேலைக்காரனைப் போல அநேக விதமான காரியங்களில் நீ ஏவி வருவது சற்றேனும் உசித மல்ல. தவிர, நான் மைனராய் இருந்து வந்த காலத்தில் நீ சொல்லுவது உசிதமானாலும் மேஜரான காலத்தில் சொல் வது தப்பு. ஸமமாய்ப் பார்க்க வேண்டும். அவ்விதம் பார்க்காவிடில் எனக்குள்ள ஸமமான பாகத்தை இந்த நிமிஷமே கொடுத்து விடவேண்டும். கொடுக்காவிடில் ந்யாயாதிபதி களின் ஸபையில் நம்மிருவர்களின் வ்யவகார மூலமாய் ஸகல ஸொத்திற்கும் வ்ரயம் ஏற்பட்டு நாம் இருவர்களும் ஒன்றுமில்லாதவர்களாய் விடுவோமல்லவா?'' என்றது போல் ப்ரஹ்மமாகிய மனிதனுக்கு மாயை ஆகிற ஸ்த்ரீயி னிடத்தில் பிறந்தவர்களான ஈச்வசரன், ஜீவன் என்ற இரண்டு குமாரர்களும் ஒருவருக்கொருவர் வாதம் பண்ணிக் கொள் வதாவது—

*ஜீவன்:*—ஈசனே! பரப்ரஹ்மமாகிற பிதாவினிடத்தில் நின்று ஜகத்தை ச்ருஷ்டிப்பதோ, பரிபாலிப்பதோ, ஸம்ஹரிப்பதோ என்ற மகத்தான ஐசுவரியம் உனக்கு அகப்பட்டதல்லவா? அதில் நானும் பாத்தியமுள்ளவனல்லவா? என்னைப் பார்த்து,

"நீ ஸந்த்யோபாஸனம் பண்ணு, ஸுராபானம் பண்ணாதே" என்று ஒரு கார்யத்தை ஏவுகிறதும் ஒரு கார்யத்தைச் செய்யாதே என்று தடுப்பதும் ந்யாயமோ? நான் கர்த்தா, போக்தா என்ற அபிமானமாகிற மைனராயிருக்கும் தன்மையில் நீ அவ்விதம் கட்டளையிட்டாலும் அகர்த்தா, அபோக்தாவாகிய ஸ்வரூப மாகிற மேஜரான தன்மையில் இருக்கும் காலத்தில் கட்டளை யிடுவது உசிதமோ? ஸமமாய் இருக்க வேணும். ஆகை யால், என்னை இனி ஒரு விதத்தாலும், ஆக்ஞாபிக்கக்கூடாது. அவ்விதம் நடக்காது போனால் நிர்விகாரமான சித்ரூபமான ப்ரஹ்மத்தினிடத்தில் ஈசனான உன்னையும் ஜீவனான என்னையும் நானே கல்பித்துக் கொண்டு நீ வேறு, நான் வேறு என்ற பேதம் அற்றுப் போகும்படிச் செய்து கொண்டு, கேவல அதிஷ்டான ரூபமான ப்ரஹ்மமாகவே மிச்சம் தேறும் படி செய்து கொண்டு விடுவேன் என்ற விதமான அநேக வித்வான்களுடைய அனுபவத்தைப் பார்க்க ப்ரஹ்ம ஸாக்ஷாத் காரத்தை அடைந்தவன் அடைந்த பிற்பாடு ஜீவனென்றும், ஈச்வரனென்றும், ப்ராம்மணனென்றும், க்ஷத்ரியனென்றும், வைசியனென்றும், சூத்ரனென்றும், ப்ரஹ்மசாரியென்றும், க்ரஹஸ்தனென்றும், ஸந்யாஸி என்றும், இவ்விதமான பேதங்கள் சற்றேனும் தோன்றாது என்பதற்கு யாதொரு சந்தேஹமுமில்லை. ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரத்தை அடைந்த வன் ப்ரஹ்மம்தான். அவனே லோக குரு என்பது என் னுடைய ஸித்தாந்தாம்.

அநேக விதமான வாதிகள் இந்த ஜகத்தைப் பொய் யென்று சொல்ல ந்யாயமில்லை என்றும் கிளிஞ்சலில் கல்பிக்கப்பட்ட வெள்ளிக்கும் இந்த ஜகத்திற்கும் அநேக விதத்தில் வித்யாஸம் இருக்கிறதென்றும், ஆகையால் ஜகத்து பொய்யென்று முன் ச்லோகத்தில் ஸித்தாந்தம் செய்தது தப் பென்றும் ஆக்ஷேபிக்கின்றார்கள். அதாவது இந்த ஜகத் திற்குக் காரணம் ப்ரஹ்மம் என்று வேதாந்தியின் ஸித்தாந்தம். ஆனபடியால் அந்த காரணமான ப்ரஹ்மம் ஸத்யமென்றே

அவர்களின் ஸித்தாந்தம். அவ்விதமிருக்க, கார்யமான ப்ர பஞ்சத்தைப் பொய்யென்று எவ்விதம் சொல்லக்கூடும். கார ணம் எவ்விதமான தன்மையோடு கூடினதோ அவ்விதமான தன்மை அல்லவா தோன்றுகிறது. ஒரு காலத்திலும் காரணம், கார்யம் இவைகளுக்கு மாறுதலான ஸ்வபாவம் ஏற்படவே நியாயமில்லை. அதோடு கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி யால் ஒரு விதமான கார்யமும் செய்யக்கூடியதாகக் காணப் படவில்லை. இவ்விதமான ஜகத்திலோ அநேக விதமான கார்யங்கள் நடந்துவருகின்றன. கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியைப்போல் இப்பிரபஞ்சமும் பொய்யாயிருந்தால் அநேகவிதமான கார்யங்களை உண்டு பண்ண ஸாமர்த்ய முள்ளதாக ஆக ந்யாயமுண்டோ? ஆகையால், இப்பிரபஞ் சத்திற்கும் கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளிக்கும் எவ்வளவு விதத்திலேயோ வித்யாஸமிருப்பதால் கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியைப்போல் பிரபஞ்சம் பொய்யென்று சொல்வதில் என்ன ப்ரமாணம்? என்ற ஆக்ஷேபணைக்கு ஸமாதான மாவது:—

கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளிக்கு இப்பிரபஞ்சம் சமானமுள்ளதே தவிர, கொஞ்சமேனும் வித்யாஸம் கிடை யாது. கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியும் அறிவுக்கு விஷயம் இப்பிரபஞ்சமும் அவ்விதமே அறிவுக்கு விஷயமல்லவா? எவ்வெவைகள் அறிவுக்கு விஷயமோ அவ்வவைகள் பொய். எவ்வெவைகள் பொய்யோ அவ்வவைகள் அறிவுக்கு விஷயம் என்ற ந்யாயமே, கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியைக் காட்டிலும் இப்பிரபஞ்சத்தில் சற்றேனும் வித்யாஸம் கிடை யாது. அது போல் பொய்தான் என்ற விஷயத்தில், ப்ரமாண மாக ஆகிறதல்லவா!

यद्दृश्यं तन्मिथ्या यन्मिथ्या तद्दृश्यं यथा शुक्तिरजतम् ।

இப்பிரபஞ்சத்தில் அநேக விதமான கார்யங்கள் உண்டா கின்றபடியால் இதை ஸத்யமென்றே சொல்ல வேண்டும்

என்பதும் தப்பு, அநேக கார்யங்கள் உண்டாவதற்காக இப் பிரபஞ்சத்தை ஸத்யமென்று ஒப்புக் கொள்ளவேண்டாம். பொய்யாக இருந்தாலும் அநேக கார்யங்கள் உண்டாகலாம். கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியும் கிளிஞ்சலில் வெள்ளி யென்று ப்ரமித்தவனுக்கு தற்காலத்தில் சந்தோஷம் என்ற கார்யத்தை உண்டு பண்ணவில்லையா? பழுதையில் தோன் றும் பாம்பானது பழுதையில் பாம்பு என்று ப்ரமித்தவனுக்கு தற்காலத்தில் பயம் என்ற கார்யத்தை உண்டு பண்ணவில் லையா? ஸ்வப்நத்தில் ஒரு புமான் ஒரு ஸ்திரீயோடு ஸம்பர்க்கம் பண்ணுவதாகக் காண்கிறான். அந்த ஸ்வப்னத்தில் கண்ட ஸ்த்ரீயும் பொய். செய்யப்பட்ட ஸம்பர்க்கமும் பொய் அல்லவா? அவ்விதமான பொய்யான ஸ்திரீ ஸம்பர்க்கத் தால் ரேதஸ்கலனம் என்ற ஒரு கார்யம் உண்டாய் விழித்த பிற்பாடும் அதைப் பார்க்கக் கூடியதாய் நேரிடுகிறதல்லவா? ஆகையால், இவ்வித அநேக திருஷ்டாந்தங்களால் இந்த ஜகத் பொய்யாயினும் அநேக கார்யங்களை உண்டு பண்ண வல்லமையுள்ளதுதான். அதற்காக ஜகத்தை ஸத்யமென்று ஒப்புக்கொள்ளவேண்டாம். அறிவுக்கு விஷயமானதால் இந்த ஜகத்தும் பொய் என்பதுதான் சாஸ்த்ரத்திற்கு ஸம்மத மாகும். தவிர ஸத்தியமான ப்ரஹ்மத்தினிடத்திலிருந்தும் உண்டான ஜகத் ப்ரஹ்மத்தைப்போலவே ஸத்யமாய் இருக்க வேண்டுமல்லவா? என்பதும் சாஸ்த்ரத்திற்கும் ஸம்மத மாகாது. காரணம் எவ்விதமோ அவ்வித தன்மையோடுதான் கார்யமிருக்கவேண்டுமென்றால் காரணம், கார்யம் என்ற வித்யாஸம் எவ்விதம் ஏற்படும். காரணம், கார்யம் என்ற வ்யவஹாரத்தாலேயே அவ்விரண்டுகளுக்கும் வித்யாஸம் ஏற்படவேண்டுமென்று தோன்றுகிறதல்லவா? அவ்வித மிருக்க, காரணம், கார்யம் என்ற வ்யவஹாரத்தையும் செய்து கொண்டு அவ்விரண்டுகளும் ஸமானமான வைபவங்களை உடையனவாயிருக்கவேண்டும் என்று ஆக்ஷேபிக்கிறவர்கள், ஸ்வபுத்தியால் இவ்விதம் சொல்லுகிறார்கள் என்று தோன்ற வில்லை. தவிர, அவ்விதமான நிர்ப்பந்தத்தை அனுஸரித்தும்

பதில் கூறப்படுகிறது. அதாவது, வ்யவஹாரத்தை அனுஸரித்து ப்ரஹ்மம், சுத்தம் என்றும் மாயையோடு கூடினதென்றும் என்று இரண்டு விதம். அவைகளில் சுத்த ப்ரஹ்மம்தான் முக் காலத்திலும் அழிவற்றது; ஸத்யம் என்று வேதாந்த ஸித்தாந் தம். மாயையோடு கூடின ப்ரஹ்மமோ, மாயை பொய்யான படியால் அத்துடன் கூடின ப்ரஹ்மமும் பொய்யென்றே ஸித் தாந்தம். அதில் சுத்த ப்ரஹ்மம் ஜகத் காரணம் அல்ல. மாயை யோடு கூடின ப்ரஹ்மம்தான் ஜகத்காரணம். காரணமான மாயை யோடு கூடின ப்ரஹ்மமானது பொய்யானபடியால் கார்யமான இந்த ஜகத்தும் பொய்யென்பதற்கு ஆக்ஷேபணை உண்டோ? இவ்விதமான தத்வத்தை அறிந்து கொள்ளமுடியாமல் காரண மான ப்ரஹ்மம் ஸத்யமான படியால் காரியமான ஜகத்தும் ஸத்யமாயிருக்க வேண்டுமென்பது ப்ராந்தியுளவன் ப்ரலாபிக் கிறது போலல்லவா இருக்கிறது! ஆகையால் ஒரு விதத்தி லும் ஜகத்தை ஸத்யமென்றோ, கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளியைக்காட்டிலும், ஜகத் வித்யாஸமுள்ளதென்றோ, சொல்லுவதற்கு, சாஸ்த்ரம் கொஞ்சமேனும் இடங் கொடுக் காது என்பது வித்வான்களுடைய அனுபவ ஸித்தம். இந்த விஷயங்களை அடியிற்கண்ட ச்லோகத்தால் விவரிக்கின் றார்.

शश्वन्नश्वरमेव विश्वमखिलं निश्चित्य वाचा गुरोः
नित्यं ब्रह्म निरन्तरं विमृशता निर्व्याजशान्तात्मना ।
भूतं भावि च दुष्कृतं प्रदहता संविन्मये पावके
प्रारब्धाय समर्पितं स्ववपुरित्येषा मनीषा मम ॥ ३ ॥

इदम्, இந்த; विश्वम्, ஜகத்தை; शश्वत्, அடிக்கடி; नश्वरमेव, துச்சம்தான்; इति, என்று; गुरोः, குருவினுடைய; वाचा, உப தேசத்தால்; निश्चित्य, தீர்மானித்துக் கொண்டு; नित्यम्, முக் காலத்திலும் அழிவில்லாததான; ब्रह्म, ப்ரஹ்மத்தை; निरन्तरम्, எப்பொழுதும் இடைவிடாமல்; विमृशता, த்யானம் பண்ணு

கிறவனாயும்; निर्व्याजशान्तात्मना, வாஸனா நாசம், மனோ நாசம், இவ்விரண்டையும் உடைத்தானவனாயும்; भूतम्, ஸஞ்சித மான; दुष्कृतम्, புண்ய பாபங்களையும்; भावि च, வரப் போகிறதான; दुष्कृतम्, புண்ய பாபங்களையும்; संविन्मये, ப்ரஹ்மஞானரூபமான; पावके, அக்னியில்; प्रदहता, பொசுக்கு கிறவனாயுமிருக்கிற; येन, யாதொரு ப்ரஹ்மநிஷ்டனாலே; स्ववपुः, தன் சரீரமானது; प्रारब्धाय, பலத்தைக் கொடுத்து வரும் கர்மாவின் பொருட்டு; समर्पितम्, அர்ப்பணம் செய்யப்பட் டதோ; सः, அந்த ப்ரஹ்மநிஷ்டன்; इति, முன் சொன்ன ப்ர காரம்; गुरुः, ஆசார்யன்; इति, என்று; मम मनीषा, என் ஸித்தாந்தம்.

தாத்பர்யம்:—

तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् ।
समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम् ॥

तद्विज्ञानार्थं, அந்த ப்ரஹ்மத்தைத் தெரிந்து கொள்ள வேண்டி யதின் பொருட்டு; सः, ப்ரஹ்மத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற விருப்பமுள்ளவன்; समित्पाणिः, ஸமித்தைக் கையில் உள்ளவனாக; श्रोत्रियम्, விஹித கர்மானுஷ்டானத் தில் தத்பரனாயும்; ब्रह्मनिष्ठम्, ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் ஸதா நிஷ்டையுள்ளவனாயும் இருக்கிற; गुरुमेव, குருவையே; अभि, அபிமுகமாக; गच्छेत्, அடைய வேண்டும்.

அநேகவிதமான அனர்த்தங்களாகிற திமிங்கிலங்களுக் கிருப்பிடமான இந்த ஸம்ஸாரத்தில் ஒழிவை அடைந்து இதில் அடிக்கடி அகப்பட்டுக் கொள்ளாமல் இதிலிருந்தும் விடுபடவேண்டுமென்ற முமுக்ஷுவானவன் சாஸ்த்ரத்தில் கூறியபடி ஸத்குருவை அடைந்து இப்பிரபஞ்சத்தின் உண்மை யையும், ப்ரஹ்மத்தின் உண்மையையும் நன்றாய் விசாரித்து

இப்பிரபஞ்சம் உண்மையில் விசாரிக்கப்பொய்யென்றும் ப்ரஹ்மமே ஸத்யமென்றும் ஸத்குருவினுடைய உபதேசத் தால் தீர்மானிப்பதோடுங்கூட இப்பிரபஞ்சத்திற்கு அதிஷ்டான மான ப்ரஹ்மஸ்வரூபத்தில் மனதை லயப்படுத்தி அந்த ப்ரம் மத்தின் ஆகாரமாகவே மனதாகும்படி பாவிக்க வேண்டும். அவ்விதமாக வாஸனாநாசம், மனோநாசம் என்ற இவ்விரண் டும் உபாயங்களாக சாஸ்த்ரங்களில் கூறப்பட்டிருக்கின்றன. ஆகையால், அவைகளை அவசியம் அனுஷ்டானம் செய்கிற வனாய் இருக்க வேண்டும். அதாவது வாஸனா என்றால் ஆஸுர ஸம்பத்தின் வாஸனை அதாவது,

दंभो दर्पोऽतिमानश्च क्रोधः पारुष्यमेव च ।

दंभः, ஐச்வர்யத்தால் உண்டாகும் அகங்காரம்; दर्पः, தர்மானுஷ்டானத்தாலுண்டாகும் அகங்காரம்; अतिमानः, இவ்விரண்டு காரணங்களாலும் தானே லோகங்களால் பூஜிக்கத் தகுந்தவன் என்ற எண்ணம்; क्रोधः, காரணமின்றி மனதிற்கு ஏற்படும் விகாரம்; पारुष्यम्, மனிதர்களுக்குப் பயத்தை உண்டுபண்ணும்படியான வார்த்தை.

*(இவைகள் எந்த மனிதர்களிடமிருந்து வருகின்றதோ அவர்களை அஸுரர்களென்று கூறப்படும். இவைகளுக்கு ஒரு நிமிஷத்தில் நமது மனதில் அவகாசம் கொடுத்து விட் டோமேயானால் அவைகள் அடிக்கடி தன்னை இந்த மனிதன் வரவழைத்துக் கொள்ளும்படி வாஸனை என்ற தன் குணத்தை கற்பித்து விட்டுப் போகிறது. ஆகையால், இந்த ஆசார ஸம்பத்து களுக்கு சற்றேனும் மனதில் இடங்கொடுக்காமல் மனதைச் சுத்தமாய் வைத்துக் கொள்ளுகிறவன்தான் வாஸனா நாச முள்ளவன் என்று ஸித்தாந்தம்).*

மனோ நாசமாவது மனதிற்கு எப்பொழுதும் ஏற்பட்டு வருகிற அநேக விதமான பரிணாமத்தை (உருவமாக ஆகும் தன்மையை அடக்கி வாஸ்தவ ஸ்வரூபத்தில் போய் இந்த

மனது ஒடுங்கும்படியாய்ச் செய்வதே மனோ நாசம். இவ் வித மனோ நாசம், வாஸனா நாசம் இரண்டுமுள்ளவன் தான் மேற்கண்டபடி ஸத்குருவினுடைய ப்ரஸாதத்திற்குப் பாத்ர னாய் ப்ரஹ்மஸ்வரூபத்தை எப்பொழுதும் இடைவிடாமல் அனுஸந்தானம் செய்வதற்கு லாயக்குள்ளவனாக ஆகிறான். இவ்விதமான திவ்ய ப்ரஹ்ம ஸ்வரூபானுபவத்தால் அவ னடையும் பலம் அடியிற் கூறியவாறு. அதாவது ஸஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாம்யம் என்று கர்மா மூன்று விதம். ஸஞ்சித மாவது முன் ஜன்மாக்களிலோ அல்லது இந்த ஜன்மாவி லேயே ப்ரஹ்ம ஞானத்தை அடைவதற்கு முன்பாக இந்தப் புருஷனால் செய்யப்பட்டு பலத்தைக் கொடுக்க ஆரம்பிக்கா மல், பலத்தைக் கொடுக்க ஸமயத்தை ப்ரதீக்ஷித்துக்கொண்டு *(காத்து)* வரும் கர்மா ஸஞ்சித கர்மா. ப்ராரப்தமாவது, இச் சரீரமாகிற பலத்தைக் கொடுத்துக்கொண்டு அநுபவத்தில் நடந்து வரும் கர்மா. ஆகாம்யமாவது ஞானமுண்டான பிற் பாடு ஏற்படக் கூடும் கர்மா. இவ்வித மூன்று கர்மாக்களில் ஸஞ்சிதம், ஆகாம்யம் என்ற இரண்டு கர்மாக்களையும் தனக்கு ஏற்பட்ட திவ்யப்ரஹ்ம ஆத்மானுபவத்தால் நாசம் பண்ணக் கூடிய வல்லமையுள்ளவனாக ஆகிவிடுவான். ப்ராரப்தகர்மா வையோ அனுபவித்தே தீரவேண்டும்'. எவ்விதம் ஒரு வில்லாளி, பாணத்தை விடுவதற்கு முன் அந்தப் பாணத்தில் தன் ஸ்வாதந்த்ரியத்தை அடைந்தவனாய் இருந்தாலும் விட்டு விட்ட பாணத்தில் தன் ஸ்வாதந்த்ரியத்தை இழந்து விடுகிறானோ, அதாவது, அந்தப் பாணத்திற்கு எவ்வளவு வேகமோ அவ்வளவு வேகத்தோடு போய் தானாகவே தான் விழ வேண்டுமோ, அவ்விதமே ஜீவ ப்ரஹ்ம ஐக்கிய ஞானத் திற்குப் பலத்தைக்கொடுக்க ஆரம்பிக்காததான கர்மாவில் தனக்கு ஸ்வாதந்த்ரியம் ஏற்பட்டாலும், பலத்தைக் கொடுக்க ஆரம்பித்ததான கர்மாவில் ஸ்வாதந்த்ரியம் கிடையாதென் பது அனுபவ ஸித்தம். அந்த ப்ராரப்தகர்மாவிற்கு பலம் என்ற வேகமானது எவ்வளவு காலம், எவ்வளவு தூரம், போகக் கூடியதோ அவ்வளவு பர்யந்தம். அந்த ப்ராரப்த கர்மாவை

அனுபவித்துத்தான் தீரவேண்டும். ஆனால், அந்த ப்ராரப்த கர்மாவினால் பிரம்ம நிஷ்டனுக்கு ஒரு விதமான ஸம்பந்தமு மில்லை. தனக்கு சரீரம் இருப்பதாகவும், அதனால் ஒரு வித மான இன்பமோ, துன்பமோ, ஏற்படுவதாகவும் எண்ண மில்லாமல் கேவலம் ப்ரஹ்மமாகவே தான் இருந்து கொண்டு ஜீவன்முக்தன் என்ற வ்யவஹாரத்திற்கு யோக்கியனாக ஆகிறான். லோக ரீதியாக ப்ராகிருத ஜனங்களுடைய த்ருஷ் டியை அனுஸரித்து ப்ராரப்தசரீரம் அவனுக்கிருப்பதுபோல் தோன்றுமே தவிர, அவனுடைய த்ருஷ்டியால் கிடையாது. அந்த ப்ராரப்த கர்மா இருந்தாலும் அவனுடைய அனுபவத் தில் இல்லாமலிருப்பதற்குமேல் தான். இவ்வித திவ்யானு பவமுள்ளவன் எவனாயிருந்தாலும் அவன் இன்ன ஜாதி இன்ன குலமென்று விசாரிக்கத்தகாதவன். ஆனபடியால் ஸாக்ஷாத் பிரம்மமென்றே தீர்மானிக்க வேண்டும். அவ்வித மான மஹான் இப்பிரபஞ்சத்திற்கோ, எனக்கோ, அஞ்ஞான மாகிற இருளைப்போக்கடித்து தத்வ ஞானமாகிற ப்ரகாசத்தை விளக்கி, ஸகல ஜீவ கோடிகளையும் க்ருதார்த்தர்களாகச்செய்ய ஆவிர்பவித்த தக்ஷிணாமூர்த்தியாகிற பரம குரு என்றே என் ஸித்தாந்தம்.

स्थूलोऽहं कृशोऽहं अन्धोऽहं बधिरोऽहं

अहं, நான்; स्थूलः, பெருத்தவன்; अहं कृशः, நான் இளைத்த வன்; अहं अन्धः, நான் குருடன்; अहं बधिरः, நான் செவிடன்.

என்ற அநேகவிதமான அனுபவங்களால் ஸகல ஜனங்களுக் கும் தேஹமே ஆத்மாவென்று தீர்மானமானதால், தேஹத்தைக் காட்டிலும் ஆத்மா வேறென்றதான அனுபவம் ஒருவருக்கும் இல்லை என்பது ஸித்தம். மேற்கண்ட அனுபவத்தால் 'நான்' என்ற சப்தத்தினுடைய பொருளில், பெருத்தல், இளைப்பு முதலான தன்மைகள் தோன்றுகின்றனவல்லவா? தேஹத்தைக் காட்டிலும் ஆத்மா வேறாய் இருந்தால், தேஹத்தில் ப்ரஸித்த மாய் ஏற்பட்ட பெருமன், இளைப்பு முதலான தன்மைகள்

'நான்' என்ற சப்தத்தினுடைய பொருளான ஆத்மாவினிடத்தில் தோன்றுவதற்கு ந்யாயமில்லையல்லவா? ஆகையால் தேஹமே ஆத்மாவென்றே ஸகல ப்ராணிகளுடைய அநுபவம் சாஸ்த்ர ஸம்மதமாகவே இருக்க வேண்டும். தேஹமே ஆத்மாவாய் இருப்பதால், ஆத்மா.

जायते, பிறத்தல்; अस्ति, இருத்தல்; वर्धते, வளர்த்தல்; परिणमते, மாறுதல், अपक्षीयते, குறைதல், विनश्यति, நாசமுறுதல்;

என்று ஆறு விதமான விகாரமுள்ளதாக ஆகிறது. இவ்விதம் விகாரியான ஆத்மாவுக்கும் விகாரமற்றதான ப்ரஹ்மத்திற்கும் சற்றேனும் ஐக்கியம் ஸம்பவிக்க ந்யாயமில்லை. ஆகையால், ஜீவாத்மாவுக்கும் ப்ரஹ்மத்திற்கும் ஐக்கியம் சாஸ்த்ர ஸம்மதமென்று ஸித்தாந்தம் செய்தது மிகவும் தப்பென்ற ஆக்ஷேபணைக்கு ஸமாதானமாவது; தேஹமே ஆத்மாவென்பதில் ஒரு விதமான ப்ரமாணத்தையும் நிரூபணம் செய்யமுடியாது. ஸகல ப்ராணிகளுக்கும் தேஹாதிகளைக் காட்டிலும் ஆத்மா வேறென்றே அனுபவமே தவிர, தேஹம் ஆத்மாவென்று ஒருவருக்காவது அநுபவம் கிடையாது. சாஸ்த்ரத்தைப் பார்க்க பதார்த்தங்கள் இரண்டே. ஒன்று ஆத்மா. மற்றொன்று அனாத்மா. ஆத்மாவென்ற பதார்த்தத்தைக் கூறும் சப்தம் 'அஹம்' என்ற சப்தம். அனாத்மாவான பதார்த்தத்தைக் கூறும் சப்தம் 'இதம்' என்ற சப்தம். ஒருவருக்காவது 'இதம்' என்ற சப்தத்தால் ஆத்மாவென்ற அனுபவம் கிடையாது. என்னுடைய தேஹம், என்னுடைய கண், என்னுடைய செவி, என்னுடைய மனது, என்னுடைய புத்தி என்ற அநுபவங்களால் தேஹாதிகளைக் காட்டிலும் ஆத்மா வேறென்றே ஸகலரும் அனுபவித்து வருகிறார்கள். தேஹமே ஆத்மாவென்று வாதிக்கிறவர்களும் 'என் தேஹ'மென்ற அநுபவத்தை மாற்றக்கூடிய சக்தி உள்ளவர்களாக ஆகமாட்டார்கள். அவர்களும் என் தேஹமென்றே அநுபவித்து வருகிறார்கள். அவ்வித அனுபவ காலத்தில் தேஹத்தைக் காட்டிலும் 'என்' என்ற சப்தத்தின் பொருள் வேறாய்

தோன்றுகிறபடியால் தேஹமே ஆத்மாவென்ற ஸித்தாந்தம் அவர்களின் ஸமாஜத்திலேதான் நிலைநிற்குமோ? ஆகையால், தேஹாத்மவாதம் சற்றேனும் சாஸ்த்ரங்களுக்கோ வித்வான்களுக்கோ ஸம்மதமாகாது. எப்பொழுது இவ்விதமான காரணத்தால் தேஹாதிகளைக் காட்டிலும் ஆத்மா வேறென்ற தீர்மானம் ஏற்பட்டுவிட்டதோ அப்பொழுது ஆத்மாவினிடத்தில் மேற்கண்ட விகாரங்கள் எவ்விதம் ஏற்படும்? ஆத்மா அவிகாரியான வஸ்துவே. அவ்விதம் அவிகாரியான ஆத்ம ஸ்வரூபமே தான் ப்ரஹ்மம் என்ற ஜீவப்ரஹ்ம ஐக்கியானுபவம் சாஸ்திர ஸம்மதமாகுவதில் ஆக்ஷேபணையுண்டோ? இவ்விஷயங்களைத் தான் விவரமாய் அடியிற் கண்ட ச்லோகத்தால் ஸ்ரீசங்கர குருவானவர் ப்ரகாசப்படுத்தி வருகின்றார்.

या तिर्यङ्नरदेवताभिरहमित्यन्तः स्फुटा गृह्यते
यद्भासा हृदयाक्षदेहविषया भान्ति स्वतोऽचेतनाः ।
तां भास्यैः पिहितार्कमण्डलनिभां स्फूर्तिं सदा भावयन्
योगी निर्वृतमानसो हि गुरुरित्येषा मनीषा मम ॥ ४ ॥

तिर्यङ्नरदेवताभिः, ம்ருகம் முதலான ஜந்துக்கள் மனுஷ்யர்கள், தேவர்கள் இம்மூன்றுவிதமான ப்ராணிகளாலேயும்; अहम्, நான்; इति, என்று; अंतः, தேஹாதிகளைக் காட்டிலும் வேறாக; स्फुटा, ஸகல ஜகத்தையும் ப்ரகாசிப்பித்துக்கொண்டு தானும் ஸ்வயமாய் ப்ரகாசித்துக் கொண்டு வருகிறதான; या, யாதொரு; स्फूर्तिः, ப்ரகாச வடிவான ஆத்ம ஸ்வரூபமானது; गृह्यते, ப்ரத்யக்ஷமாய் அநுபவிக்கப்படுகின்றதோ; यद्भासा, யாதொரு ப்ரகாச வடிவாகிற ஆத்ம வஸ்துவின் காந்தியால்; हृदयाक्षदेहविषयाः, மனது, இந்த்ரியம், தேஹம் முதலான விஷயங்கள்; स्वतः, ஸ்வயமாக; अचेतनाः (सन्तः), ஜடங்களாய் இருக்கிறவைகளாய்க் கொண்டு; भान्ति, ப்ரகாசிக்கின்றதுகளோ; भास्यैः, ஸௌர்யனுகாந்தியால் ப்ரகாசிக்கிறதுகளான

மேகங்களால்; पिहितार्कमण्डलनिभाम्, மறைக்கப்பட்ட ஸூர்ய மண்டலத்திற்கு ஸமானமான; ताम्, அந்த; स्फूर्तिं, ப்ரகாச வடிவ மாகிற ஆத்ம வஸ்துவை; सदा, எக்காலத்திலும்; भावयन्, தானே அதுவென்று அநுஸந்தானம் பண்ணுகிறவனாயும்; योगी, அதற்குத் தகுந்த ஸாதனங்களை அநுஷ்டானம் பண்ணு கிறவனாயும்; निर्वृतमानसः, அவ்விதம் அநுஸந்தானத்தினுடைய பலமான ஸ்வரூபஸுகத்தை அடைந்தவனாயுமிருக்கிற மனிதன்; हि, யாதொரு காரணத்தால்; ब्रह्म, ஜாதி வர்ணாச்ரமம் அற்றதான பரப்ரஹ்மமே; तस्मात्, ஆகையால்; सः, அவன்; चण्डालः, சண்டாளனாகவோ; अस्तु, இருக்கட்டும்; द्विजः, ப்ராஹ்மணனாகவோ இருக்கட்டும்; गुरुः, லோக குரு; इति, என்று; मम, என்னுடைய; मनीषा, நிச்சயம்.

தாத்பர்யம்:—புண்யம், பாபம், புண்யபாபமிச்ரம் என்று மூன்று விதம் கர்மாவானது சாஸ்த்ரத்தில் ப்ரஸித்தம். புண்ய கர்மாவென்றால் சாஸ்த்ரத்தில் அவச்யம் செய்ய வேண்டு மென்று விதிக்கப்பட்டவைகள். பாப கர்மாவென்றால் சாஸ்த்ரத் தில் செய்யக் கூடாதென்று தள்ளப்பட்டவையாகும். புண்யம், பாபம் இரண்டும் சேர்ந்தது மிச்ர கர்மா. இவ்விதமான மூன்று விதமான கர்மாக்களில் பாப கர்மாவைச் செய்வதின் பலன் ம்ருகம் முதலான திரியங் ஜன்மாவில் ஜனனம். புண்ய கர்மாவைச் செய்வதன் பலன், தேவதைகளாக ஸ்வர்க்க லோகத்தில் ஜனிப்பது. புண்யம், பாபம் என்ற இரண்டு கர்மாக்களைச் செய்வதின் பலன் மனித லோகத்திலே மனித னாய் ஜனிப்பது. இவ்விதம் பாப கர்மாவினால் ஏற்பட்ட ம்ருகம் முதலான திரியங் ஜந்துக்களுக்கோ, புண்ய கர்மாவி னால் ஏற்பட்ட இந்த்ரன் முதலான தேவர்களுக்கோ, புண்ய பாப கர்மாவினால் ஏற்பட்ட மனிதர்களுக்கோ, ஸகலருக் கும் 'நான்' என்ற சப்தத்தாலே ஆத்மா என்று வ்யவஹரிக் கும் அனுபவம் இருந்து வருகிறதே தவிர, வேறு விதமான சப்தத் தால் ஆத்மாவின் அனுபவம் கிடையாது. 'நான்' என்ற

சப்தத்தை விவரிக்காதவன் ஒருவனும் இவ்வுலகில் இல்லை. 'நான்' என்ற சப்தமோ தேஹத்தைக் காட்டிலும் வேறான ஆத்ம வஸ்துவைத்தான் சொல்லும். ஆனாலும், தேஹத்திலும் 'நான்' என்ற சப்தத்தால் வ்யவஹரித்து வருகிறார்களேயென்றால், அந்த வ்யவஹாரமும் செம்பருத்திப்பூவின் ஸமீபத்திலுள்ள ஸ்படிகத்தில் அந்த செம்பருத்திப்பூவின் சிவப்பு காந்தியைக் கல்பிப்பது போல ஆத்மாவின் ஸமீபத்திலுள்ள தேஹத்தில் ஆத்மாவைச் சொல்லும் 'அஹம்' என்ற சப்தத்தைக் கல்பிப்பதே ஆகும், அன்றி உண்மையாக ஏற்படாது. ஆகையால், 'அஹம்' என்ற சப்தத்தால் ஆத்மாவை ஸகலரும் அநுபவித்து வருகிறபடியாலும், 'அஹம்' என்ற சப்தமும் அனாத்மவஸ்துக்களைச் சொல்வதில் தாத்பரியமில்லை என்பதை 'அஹம்' என்ற சப்தமே காட்டுகிறபடியாலும், 'அஹம்' என்ற சப்தத்தின் பொருளான ஆத்மா ஸகலமான அனாத்மவஸ்துக்களைக் காட்டிலும் வேறென்பதோடுங்கூட ஸகல அனாத்மவஸ்துக்களுடைய கல்பனைக்கு அதிஷ்டானமாயும், ஜடமான மனது, இந்த்ரியம், தேஹம் முதலான அனாத்ம வஸ்துக்களை ப்ரகாசிப்பித்துக் கொண்டு, தான் ப்ரகாசிப்பதற்கு வேறொரு ப்ரகாசத்தை அபேக்ஷிக்காமல் ஸ்வயமாகவே ப்ரகாசித்துக் கொண்டு சிதேகரஸ (चिदेकरस), வடிவாக விளங்கி வருவது அனுபவ ஸித்தம். ஆனால், ஸகலராலும் 'அஹம்' என்ற சப்தத்தால் ஆத்மா அநுபவிக்கப் படுமேயாகில், ஆத்மாவின் அநுபவமல்லவா மோக்ஷத்திற்குக் காரணம். ஆகையால், ஸகலரும் முக்தர்களாகவே ஆகி விடலாமே. அநேக ஜீவ கோடிகளில் ஒருவனையும் பத்தன் (बद्धः), என்று சொல்ல ந்யாயமில்லையே? அநேகமாய் ஸகலரும் பத்தர்களாகவல்லவோ காணப்படுகிறது. ஆகையால், 'அஹம்' என்ற சப்தத்தால் 'ஆத்மா' அனுபவிக்கப்படுகிறதென்று சொல்வது ஸகலரும் பத்தர்களாகக் காணப்படுவதான ப்ரத்யக்ஷானுபவத்திற்கு விரோதமாக இருக்கிறதல்லவா? என்று ஆக்ஷேபத்திற்கு இடமுண்டு.

ஆனாலும், அந்த ஆக்ஷேபணை, ஆக்ஷேபணையாக ஏற்பட மாட்டாது.

तमहंप्रत्ययव्याजात् सर्वे जानन्ति जन्तवः ।
तथापि न विजानन्ति शिवरूपेण मोहिताः ॥

तम्, அந்த ஆத்மாவை; अहंप्रत्ययव्याजात्, 'அஹம்' என்ற அனுபவமூலமாக; सर्वे, ஸகலமான; जन्तवः, ப்ராணிகளும்; जानन्ति, அறிகிறார்கள்; तथापि, அப்படி அறிந்தாலும்; शिवरूपेण, பரமேச்வரனுடைய மாயையால்; मोहिताः सन्तः, மோஹிக்கப் பட்டவர்களாய்க் கொண்டு; न विजानन्ति, விசிதமாக அறி கிறார்கள் என்பது இல்லை.

அதாவது, உலகத்தில் ஒரு வ்ருக்ஷமானது தான் மாமர மாக இருந்து கொண்டு ஸகல பிராணிகளுக்கும் வேம்பாகத் தோன்றிக்கொண்டிருக்கும்படி ப்ரஹ்ம ஸ்ருஷ்டியில் இவ் விதமான ஒரு ஆச்சர்யம் ஏற்பட்டிருக்குமேயாகில், அந்த வ்ருக்ஷத்தை ஸகலரும் வேம்பாக அறிகிறார்கள். ஆனாலும், உண்மையான ஸ்வரூபத்தை அறியவில்லை என்று சொல் வதுபோல் இந்த ஆத்ம வஸ்துவானது தான் அகர்த்தாவாய், அபோக்தாவாய் இருந்து கொண்டு வெளிக்கு கர்த்தாவாய், போக்தாவாய் அறியும்படி விளங்கி வருகிறது. ஸகலரும் 'அஹம்' என்ற அநுபவத்தால் தேஹாதிகளைக் காட்டிலும் வேறாகவே அனுபவித்து வருகிறார்கள். ஆனாலும், அகர்த்தா, அபோக்தாவாகிற வாஸ்தவத் தன்மையை அறிகிறதில்லை என்ற ஸ்ம்ருதியின் தாத்பர்யப்படி ஸகலரும் 'அஹம்' என்ற அனுபவத்தால் ஆத்மவஸ்துவை அறிந்தவர்களாய் இருந்தா லும் அகர்த்தா, அபோக்தாவான ஆத்மாவினுடைய ஸ்வரூ பத்தை அறியாதவர்களானபடியால் பத்தர்களாகக் காணப் படுகிறார்கள். ஆத்ம வஸ்துவின் அறிவு மாத்ரம் மோக்ஷத் திற்குக் காரணம் இல்லை. ஆத்மா, அகர்த்தா, அபோக்தா என்ற அறிவுதான் மோக்ஷத்திற்குக் காரணம். அவ்விதமான அறிவு ஏற்படுவது துர்லபம்.

आश्चर्यवत्पश्यति कश्चिदेनं आश्चर्यवद्वदति तथैव चान्यः ।
आश्चर्यवच्चैनमन्यः शृणोति श्रुत्वाप्येनं वेद न चैव कश्चित् ॥

आश्चर्यवत्, தான் அகர்த்தாவும், அபோக்தாவாயும் இருந்து கொண்டும் வெளியில் ஸகலராலும் 'அஹம்' என்ற அனுபவத்தால் கர்த்தாவாயும் போக்தாவாயும் அறியப்படுகிறபடியால் பரம ஆச்சர்ய ரூபமான; एनम्, இந்த ஆத்மாவை; कश्चित्, எவனாவது ஒருவன்தான்; पश्यति, அறிகிறான்; तथा, அப்படியே எவனாவது ஒருவன்தான்; अन्यः सन्, சிஷ்யன் கேட்ட கேள்விக்கு ஸமாதானம் சொல்லக் கூடிய வல்லமையுள்ளவனாய்க் கொண்டு; एनम्, இந்த ஆத்ம வஸ்துவை; आश्चर्यवत्, சப்தத்தால் சொல்லக் கூடாததான இந்த ஆத்ம வஸ்துவைச் சொல்லுகிறபடியால் ஆச்சர்யமாயிருக்கும்படி; वदति, உபதேசிக்கிறான்; अन्यः, ஸஹன சக்தியோடு கேட்கும் தன்மையுள்ள யாராவது ஒருவன்தான்; एनम्, இந்த ஆத்ம வஸ்துவை; आश्चर्यवत्, ஸகல ஜனங்களுக்கும் ஆச்சர்யமாயிருக்கும்படி; शृणोति, கேட்கிறான்; श्रुत्वापि, கேட்டும்; एनम्, இந்த ஆத்ம வஸ்துவை; कश्चित्, ஒருவனும்; नैव वेद, அறியத்தான் இல்லை.

என்ற ஸ்ம்ருதியில் கூறியபடி ஆத்மாவினுடைய யதார்த்தமான ஸ்வரூபத்தை அறிவது துர்லபமானபடியால் அகர்த்தாவாயும், அபோக்தாவாயும், ஆத்மஸ்வரூபத்தை அறிகிறவனே ரொம்பவும் துர்லபம்; அறிந்தாலும் அதை அன்யர்களுக்கு உபதேசிக்கிறவன் துர்லபம்; அதிலும் ஜனங்களுடைய மனதிலுண்டான ஸகல ஸந்தேகமும் தெளிய உபதேசிக்கிறவன் மிகவும் துர்லபம்; அதிலும் அதைக்கேட்கிறவன் மிகவும் அறிது; அதிலும் அதைத் தெரிந்து கொண்டவன் மிகவும் அறிது என்ற தாத்பர்யத்தால் 'அஹம்' என்ற அநுபவத்தால் ஸகலரும் ஆத்ம வஸ்துவை அறிந்தவர்களாயிருந்தாலும் ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை அறிந்தவர்களிருப்

பது துர்லபம் அல்லவா? உண்மையான ஸ்வரூபத்தை அறிவதில் என்ன தடையென்றால் ஸூர்யனால் ப்ரகாசிப்பிக்கச் செய்யப்பட்டதான மேகங்கள் எவ்விதம் ஸூர்யனையே மறைத்து ஜனங்களுக்கு ஸூர்யனுடைய உண்மையைத் தெரிந்து கொள்ளாமலிருப்பதற்குத் தடையாய் ஏற்படுகிறதோ அவ்விதமே மேகம்போல் ஜடமான இந்த பஞ்ச கோசங்களும் ஆத்மாவினுடைய ப்ரகாசத்தால் ப்ரகாசித்து வருகின்றவைகளாக இருந்தாலும் ஆத்மாவையே மறைத்து வருகின்றது. ஆகையால், ஆத்மாவின் உண்மையை அறிய பஞ்ச கோசங்களாகிற ஆவரணமே தடை. அத்தடையை நிவர்த்திக்க எப்பொழுதும் இடைவிடாமல் ஆத்மாவினுடைய ஸ்வரூபத்தின் உண்மையான தத்வத்தின் பாவனையால் ஏற்படும் திவ்ய ஞானமேதான் உபாயமாகும். ஆத்மாவின் உண்மையான தத்வத்தை பாவிக்கும் முமுக்ஷுவான புருஷனானவன் அதற்குச் சிதமான லக்ஷணத்தோடு கூடியவனாய் இருக்க வேண்டும். அவ்வித லக்ஷணங்களாவன:—

मौनं योगासनं योगः तितीक्षैकान्तशीलता ।
निस्पृहत्वं समत्वं च सप्तैवेत्येकदण्डिनः ॥ इति

**मौनम्,** வாக்கு வ்யாபாரத்தை அடக்குவது; **योगासनं,** யோகத்திற்கு அங்கமான ஆஸனமும்; **योगः,** மனதை அடக்குவது; **तितीक्षा,** யார் எதைச் சொன்னாலும் ஸஹிக்கும் சக்தி; **एकान्तशीलता,** தனியாக வசிப்பதான ஸ்வபாவம்; **निस्पृहत्वं,** ஆசையில்லாத தன்மை; **समत्वं,** ஸமபாவனை.

அதாவது இவ்விதமான முனிவர்களைப்போல் ப்ரபஞ்ச விஷயமான வாக் வ்யாபாரத்தை விட்டு ஆத்மாவினுடைய ஸ்வரூபத்தை மாத்ரம் நினைத்துக் கொண்டிருப்பதான மௌனம் என்ற லக்ஷணம் ஆத்மதத்வ ஸ்வரூபத்தை பாவிப்பவனிடத்தில் அவச்யமாய் இருக்க வேண்டும். அவன் ஆத்மதத்வ ஸ்வரூபத்தைப் பாவிக்கும் காலத்தில் யோகசாஸ்த்ரத்தில்

கூறிய ஒன்பது விதமான ஆஸனங்களுக்குள் ஏதாவது ஒரு ஆஸனத்தில், உட்கார்ந்தவனாக இருக்க வேண்டும். அதிலும் வீராஸனம், பத்மாஸனம், முக்கியமான ஆஸனங்கள். இடது காலை கீழ் வைத்துக் கொண்டு வலது காலை அதின்மேல் போட்டுக் கொள்வதே வீராஸனமாகும். இடது பாதத்தை வலது தொடையில் படும்படியாயும், வலது பாதம் இடது தொடையில் படும்படி உட்கார்ந்திருப்பதே பத்மாஸனமாகும். இவ்விதமாக இரண்டாஸனங்கள், ஜபம், ஈச்வராராதனம் முதலிய ஸத்கர்மாக்களில் ஆவச்யகம். இந்த இரண்டு விதமான ஆஸனங்களில் எது ஸுகமோ அதில் இருக்கிறவனாய்க் கொண்டு ஆத்மதத்வத்தைப் பாவிக்க வேண்டும். அதோடுங்கூட பூரகம், கும்பகம், ரேசகம் என்ற மூன்று விதமான ஸாதனங்களால் ப்ராணனை ஜெயித்து அந்த ப்ராணனுடைய ஜயமூலம் ஆங்காங்கு ப்ரசுரிக்கிற மனதை ஒரு விதமான ஸ்வரூபத்தில் நிலை நிறுத்துவதான தன்மையையும் மேற்கண்ட அதிகாரிக்கு அவச்யம் வேண்டும். அதாவது, பூரகம் என்றால் வெளியிலுள்ள வாயுவை சந்த்ர நாடி *(இடா நாடி)* வழியாக இடது மூக்கு த்வாரத்தால் உள்ளே இழுத்து அடக்குவதே. கும்பகம் என்றால் உள்ளே அடக்கின வாயுவை ப்ரஹ்ம நாடியாகிற ஸுஷும்ணா நாடியில் அடக்கி ஸ்தம்பனம் செய்து மனதை ஏதாவது ஒரு ஸ்வரூபத்தில் நிலைநிறுத்துவதே. அவ்விதம் சற்று அனுபவித்து, அதாவது தன்னால் எவ்வளவு காலம் அவ்விதம் ஸுஷும்ணா நாடியில் ஸ்தம்பனம் பண்ண முடியுமோ அவ்வளவு காலம் அப்யஸித்து மறுபடியும் அந்த வாயுவை ஸூர்ய நாடியான பிங்களா நாடியென்ற வலது நாடி வழியாக அந்த வாயுவை வலது மூக்கு த்வாரம் வழியாய் வெளியில் விடுவது ரேசகம். இவ்விதமாக ப்ராணனுடைய நிரோத மூலமாக, மனோ நிரோதம் செய்வதும் ஆவச்யகம். அத்துடன் திதீக்ஷை என்ற குணத்தையும் கைக்கொள்ள வேண்டும். அதாவது, மனதிற்கு விகாரம் உண்டாகும்படியான ஜனங்களின் ப்ரியமான சேஷ்டையோ, அப்ரியமான சேஷ்டையோ இவைகள் ஏற்படும்

காலத்தில் ப்ரியமான சேஷ்டையால் ஸந்தோஷம் என்ற விகாரம் உண்டாவதில் மனதிற்கிடங் கொடுக்காமலும் அப் பிரியமான சேஷ்டையால் துக்கம் என்ற விகாரத்திற்கு இடங் கொடுக்காமலும் ஒரே விதமாய் மனதை வைத்துக் கொள்வ தான ஸஹன சக்தியே ஆகும். தவிர, துர்ஜனங்களுடைய ஸமாஜத்தில் வஸிக்காமல் ஏகாந்தமான ஸ்தலத்தில் எப் பொழுதும் வஸிப்பதென்பதையும் அவசியம் அப்யஸிக்க வேண்டும். தவிர ப்ராணிகளை அநேகப் ப்ரகாரமாய் பாப கர்மாவில் ப்ரவிர்த்திக்கும்படி செய்வதற்கு காரணமான அநேக விதமான கெட்ட குணங்களில் ஆசையென்பது முக்கிய மானதல்லவா? மகா பண்டிதர்களைக்கூட ஆசையென்பது தன் வசப்படுத்திக் கொண்டு அவர்களின் விவேகத்தை மறைத்து அவர்களை அக்கார்யத்தில் ப்ரவர்த்திக்கச் செய்யும் என்பது ப்ரஸித்தம். சாஸ்த்ரத்திலும்,

क्षुत्पिपासे कुटुम्बिन्यौ मयि जीवति नान्यगे ।
ताभ्यां आशा तृतीया च तस्याः शृङ्गारचेष्टितम् ॥

कुटुम्बिन्यौ, பத்னிகளான; क्षुत्पिपासे, பசி, தாகம் ஆகிய இவ்விரண்டுகளும்; मयि, நான்; जीवति सति, ஜீவிக்கும் பொழுது; अन्यगे, அன்யர்களை அடைந்தவர்களாக; न, இல்லை; ताभ्यां, அவ்விருவர்களைக் காட்டிலும் வேறான; आशा च, ஆசையென்பவளும்; तृतीया, மூன்றாவது பார்யை; तस्याः, அவளுடைய; शृङ्गारचेष्टितम्, ஸ்ருங்கார லீலை.

நேபாள தேசத்தில் ஸர்வ சாஸ்த்ரத்திலும் பாண்டித்ய முள்ளவனான, அதிலும் வேதாந்த சாஸ்த்ரத்தில் மகாபண்டி தனான, வித்யாநிதி என்ற ஒரு ப்ராம்மணன் இருந்து வந்தான். அவன் அந்த தேசத்தரசனுக்கு மிகவும் ப்ரியமுள்ளவன். அந்த ப்ராஹ்மணன் சொல்லுகிறபடிதான் ராஜனும் ஸகல கார்யங்களையும் செய்கிறது வழக்கம். இவ்விதமிருக்க, ஒரு தினத்தில் அந்த தேசத்தரசனுக்கு ஜன்ம நக்ஷத்ர மஹோத்

ஸவம் நடைபெற்றது. அந்த உத்ஸவ தினத்தில் ஸகல ஜனங்களுக்கும், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு ஸாவரன் வீதம் கொடுத்து ஸகல ஜனங்களையும் திருப்தி செய்து வைக்கும்படி கட்டளையிட்டான். அவ்விதமே கீழதிகாரிகளும் ராஜனுடைய கட்டளையை அனுஸரித்து ஸகல ஜனங்களையும் கோட்டைக்குள்ளடைத்து, நான்கு வாசல்கள் வழியாகவும், ஜனங்களுக்கு ஒவ்வொரு ஸாவரன் வீதம் கொடுத்து அவர்களை வெளியில் விட்டார்கள். அதில் ராஜனுக்கும் மிகவும் ப்ரீதியுள்ளவனாகவும் மஹாவித்வானாயுமிருக்கிற வித்யாநிதி என்ற ப்ராஹ்மணனும் ஒரு கோட்டை வாசல் வழியாக ஒரு ஸாவரன் பூரி தக்ஷிணையை தன் கையில் வாங்கிக் கொண்டு வெளியில் வந்தான். வந்தவுடன் தன் கையைத் திறந்து பார்க்க ஸாவரன் என்றதைப் பார்த்து மிகவும் ஸந்தோஷத்தை அடைந்ததோடுங்கூட எவ்விதத்திலும் இந்த கோட்டைக்குள் இன்னும் ஒரு தடவை ப்ரவேசித்து விட்டால் இரண்டாந் தடவையும் ஒரு ஸாவரன் வாங்கலாமென்ற கெட்ட எண்ணம் அவனுக்கு உதித்தது. உடனே, உள்ளே நுழைய ஆங்காங்கு சுற்றி ஜனங்களறியாமலிருக்கும்படி இடத்தையும் காலத்தையும் விசாரித்து வரும் ஸமயத்தில் கோட்டையின் ஒரு மூலையில் ஜனங்கள் இல்லாமலும் லகுவாய் ஏறி உள்ளே குதிக்கும்படியான வழியாகவும் காணப்பட்டது. அவ்விதமான வழியாய் உள்ளே குதிக்கும் ஸமயத்தில் அக்கோட்டைச் சுவரின் மேல் பதித்திருந்த பீங்கான்களால் சரீர முழுமையும் காயப்படுத்தப்பட்டவனாய்க் கொண்டு இரத்த ப்ரவாஹத்துடன் மிகவும் ச்ரமத்தோடு உள்ளே குதித்தான். உடனே, தன் கையிலிருந்த சிவப்பு ஸாதராவினால் அந்த ரத்தத்தை துடைத்து மூடிக் கொண்டு முன் எந்த வாசல் வழியாக ஒரு ஸாவரனை வாங்கிக் கொண்டு வெளியில் சென்றானோ அவ்வாசலின் வழியே பூர்வ கர்ம வசத்தால் மறுபடியும் சென்றான். அவ்வாசலில் ஒவ்வொரு ஜனத்திற்கும் ஒவ்வொரு ஸாவரன் தக்ஷிணையைக் கொடுத்து வரும் உத்யோகஸ்தனுக்கும் இந்த வித்வான் மிகவும்

தெரிந்தவன். அவ்விதமிருக்க அந்த வாசலின் வழியே இரண்டாந் தடவையும் பூரிதக்ஷிணை வாங்கச் சென்ற பொழுது அந்த உத்யோகஸ்தன் இந்த வித்வானைப் பார்த்துக் கூறியதாவது: ''ஹே, பண்டித சிரேஷ்டனே! தங்களுக்கு ஸகல சாஸ்த்ரத்திலும் மேன்மையான பாண்டித்யம் உண்டல்லவா? அதிலும் வேதாந்த சாஸ்த்ரத்தில் தங்களுக்கு ஸமானமான வேறொரு பண்டிதன் உலகத்திலுண்டோ? அந்த வேதாந்த சாஸ்த்ரத்தில் தங்கத்தையும், வாசலில் கிடக்கும் மண்ணாங் கட்டிகளையும் ஸமானமாய் நினைத்து வைராக்யத்தையடைய வேண்டுமென்றல்லவா கூறப்படுகிறது! ஆனால் தாங்கள் படித்த வேதாந்த சாஸ்த்ரத்தில் 'ஒரு தடவை பூரி தக்ஷிணை வாங்கினால் போதாது இரண்டாந் தடவையும் எவ்வித உபாயத்தினாலேயாவது ஆங்காங்கு நின்று கொண்டிருக்கும் காவற்காரர்களையும் வஞ்சித்து விட்டு பூரி தக்ஷிணை வாங்க வேண்டியது ஆவசியகமென்று கூறப்பட்டிருக்கிறதோ? இதுவென்ன அக்ரமம், படித்தவர்களே இவ்விதம் செய்தால் படிக்காதவர்கள் எவ்விதமான அக்ரமத்தைத்தான் செய்ய மாட்டார்கள்?'' என்று மிகவும் வருத்தத்துடன் அந்தப் பண்டிதனைப் பார்த்து அந்த உத்யோகஸ்தன் கூறினவுடன் அந்தப் பண்டிதனுக்கு உடனே பரமவைராக்யம் உண்டாய் மனோ வருத்தத்துடன் சொல்லுவதாவது: ''ஹே! ஸ்வாமின் என் பிதா என்னை கர்ப்பாதானம் செய்த காலத்திலே எனக்கு பசி தாஹம் என்ற இரண்டு ஸ்த்ரீகளையும் விவாஹம் செய்து வைத்தார். அவ்விருவரும் நான் உயிரோடிருக்கும் பர்யந்தம் கனவில்கூட இன்னொரு புருஷனை மனதில் நினைக்காமல் மஹாபதிவ்ரதைகளாக இருக்கிறவர்கள். தற்காலத்தில் அவ்விருவர்களும் கிழத்தன்மை அடைந்தமையால் அவ்விருவர் களைக் காட்டிலும் வேறான ஆசையென்ற ஒரு ஸ்த்ரீயை விவாஹம் செய்து கொண்டேன். அந்த ஆசையென்ற ஸ்த்ரீ எனக்கு மிகவும் ப்ரியமுள்ளவளாகையால் நானிருக்குமிடத்திலேயே எப்பொழுதுமிருக்க உத்ஸாஹமுள்ளவள். ஆகையால் தான் இப்பொழுதும் நான் பூரிதக்ஷிணை வாங்கும் ஸமயத்தி

லும் பின் தொடர்ந்து வந்திருக்கிறாள். இவ்வித ஸமாஜத்தி லும் என்னை அந்த ஆசையென்ற மூன்றாவது ஸ்த்ரீ க்ரீடிக்க வரவேண்டுமென்று நிர்ப்பந்தம், செய்து ரக்த சந்தனத்தை மாரிலும் பூசி என்னை ஹிம்ஸித்து வருகிறாள். ப்ரபுக்கள் நன்றாய்ப் பார்க்கலாம்,'' என்று தன் ஸாதராவைத் திறந்து காட்டினான். உடனே அந்த வித்வானுக்கும் பரம வைராக்யம் உண்டாகி 'ஆசையாலல்லவா நாம் கெட்டோம்! ஆசைக்கு நாம் இடங்கொடுக்கக் கூடா'தென்று தீர்மானித்து, அந்த நிமிஷத்திலேயே ஆசையை விட்டொழித்து, ஸந்யாஸாச் ரமத்தையடைந்து பரப்ரஹ்மத்தினிடத்தில் நிஷ்டையைச் செய்து கொண்டு ஸமாதியில் இருப்பவனாக ஆகிவிட்டான். ஆகையால் ஆசையென்றவளுக்கு இடங்கொடுக்கப்பட்டவ னுக்கு கொஞ்சமேனும் ஸுகமில்லாததோடுங்கூட அந்தந்த இடத்தில் அவமானத்தையும் அடைவான் என்பது நிச்சயம் என்ற தாத்பரியத்தைக் கவனிக்க, ஆசையென்ற துர்க்குணத் திற்கு பாத்திரனாய் இருக்கக்கூடிய மனிதன் ஒருவிதமான நிலையுமில்லாமல் பாபத்தையே ஸம்பாதித்தவனாக ஆகு வான் என்பதில் யாதொரு ஸந்தேஹமுமில்லை. இவ்வித ஆசையால் உண்டாகும் தீமையை ஆலோசிக்க, ப்ரஹ்ம பாவனையையடைய வேண்டுமென்று எண்ணமுள்ள முமுக்ஷு வானவன் ஆசையை விட்டு நிஸ்பிருகன் *(ஆசையற்றவன்)* என்ற ப்ரஸித்தியை யடைவது ஆவச்யகம். அத்துடன் ப்ராஹ் மணன், க்ஷத்ரியன், வைச்யன், சூத்ரன் என்று சரீரத்தால் வித்யாஸம் தோன்றுவதாயிருந்தாலும் அவ்விதம் ஸகல தேஹங்களிலும் அந்தர்யாமியான ஆத்மசைதன்யம் ஏக ரூபமாகவேதான் இருக்கிறதென்ற பாவனையினுடைய உத்கர்ஷத்தால் அவ்விதமே அநுபவத்திலும் அடைய வேண் டும். ஆனால் அநுபவம் இரண்டு விதம். பாவனாநுபவம், கார்யானுபவம் என்பன. அவற்றில் பாவனையால் வஸ்து ஒன்று என்ற அனுபவம் சாஸ்த்ரசித்தமேயொழிய க்ரியை யால் வஸ்து ஒன்று என்ற அனுபவம் சாஸ்த்ர சித்தமல்ல. க்ரியையினால் வர்ணாச்ரம பேதங்களை அநுஷ்டித்துத்தான்

தீரவேண்டும். க்ரியையாலும் வர்ணாச்ரம பேதங்களை இழந்தவனாய் இருந்தால் அவ்விதமான ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பேதம் ஏற்படாது. ஆகையால், க்ரியையில் பேதத்தைத் தான் அநுஷ்டானம் செய்ய வேண்டும். பாவனையில் அத்வைதானுபவமும், ஸமபாவனையும், அடைய வேண்டுவது ஆவச்யகம். இவ்விதமான மௌனம், யோகாஸனம், யோகம், திதீக்ஷா, ஏகாந்தசீலா, நிஸ்பிருகத்வம், ஸமத்வம் என்ற ஏழுவித குணங்களையுடைய ஸஹாயத்தால் எப்பொழுதும் இடைவிடாமல் அகர்த்தாவாயும் அபோக்தாவாயும், நித்யனாயும், சுத்தனாயும், புத்தனாயும், முக்தனாயும், சிதேகரஸனாயும், விளங்கி வரும் ஆத்மாவைக் காட்டிலும் வேறில்லாததான ப்ரஹ்மஸ்வரூபத்தினிடத்தில் மனதை லயப்படுத்தி,

ब्रह्माकारमनोवृत्तिप्रवाहः अहंकृतिं विना ।
संप्रज्ञातः समाधिः स्यात् ध्यानाभ्यासप्रकर्षतः ॥

**अहंकृतिं विना**, *நானென்ற பாவத்தை மறந்து;* **ब्रह्माकारमनोवृत्तिप्रवाहः**, *இடைவிடாமல் ப்ரஹ்மமாகவே மனதின் பரிணாமத்தின் ப்ரவாஹம்;* **संप्रज्ञातः समाधिः**, *ஸம்ப்ரக்ஞாத ஸமாதியாக;* **ध्यानाभ्यासप्रकर्षतः**, *த்யானம், அப்யாஸம் இதினுடைய ஆதிக்யத்தால்;* **स्यात्** , *உண்டாகிறது.*

என்ற ப்ரகாரம் ப்ரஹ்மரூபமாக இடைவிடாமல் மனதை பரிணமிக்கும்படி செய்யக்கூடிய ஸம்ப்ரக்ஞாத ஸமாதியில் அதிகாரத்தையடைந்தவனாக ஆகிவிடுவான். இவ்விதமான ஸமாதியில் எப்பொழுது ஸ்திரமான நிலை ஏற்படுகிறதோ அப்பொழுது அளவற்றததான ஸ்வரூபானந்தத்தையடைந்தவனாக ஆகிவிடுகிறான். அதாவது, நித்ய, நிரதிசய, ஆனந்தகரமான ப்ரஹ்ம வடிவாகவேதான் ஆகிறானே தவிர, வேறுவிதமான ஜாதி, குலம், ஆச்ரமம் என்ற வித்யாஸத்தையுடையவனாக ஆகமாட்டானென்பது (ब्रह्मवित् ब्रह्मैव भवति ब्रह्मवित्,

ப்ரஹ்மதத்வத்தை அறிந்தவன்; ब्रह्मैव, ப்ரஹ்மமாகவே; भवति, ஆகிறான்). இந்த ச்ருதியால் ஸித்தமல்லவா? ஆகையால் இவ்விதமான ச்ரேஷ்டமான அனுபவத்தையுடையவன் ஜாதி வர்ணாச்ரமத்தினின்றும் வேறுபட்டவனானபடியினாலும், ப்ரஹ்மரூபமானபடியினாலும் அவன் லோக குரு என்பது என் ஸித்தாந்தம்.

இவ்வுலகில் அறிதான மானிட ஜன்மாவை அடைந்த தற்கு வேதாந்த ஸித்தாந்தமான ஜீவப்ரஹ்மைக்கிய அனு பவத்தையடைய வேண்டியது ஆவச்யகம் என்றாலும் இப்ர பஞ்சத்தில் புத்ரன், பணம், ஸ்த்ரீ இம்மூன்றுகளால் ஏற் படும் ஸுகானுபவத்தைவிட்டு ப்ரஹ்மானந்தத்தை அடை வதில் என்ன ப்ரயோஜனம்? இவ்வுலகத்திலோ, மற்ற ஸ்வர்க் காதி லோகங்களிலோ, ஏற்படும் திவ்ய ஸுகம் போலொத்த ஸுகம் அவ்வனுபவத்தில் ஏற்படக்கூடுமா? என்பதான ஆக்ஷே பணைக்கு ஸமாதானமாவது: இந்த ஸம்ஸார மண்டலத்தில் இந்த லோகமோ மற்ற லோகமோ ஒரு இடத்திலும் ஸுக மென்பதே சற்றேனுமில்லை. ஸகலமும் துக்க ரூபம்தான். ஸுகம் போல் தோன்றினாலும், எந்த பதார்த்தம் ஸுக மென்று தோன்றுகிறதோ அந்த பதார்த்தம் ஸ்வயமாகவே ஸுகரூபம் அல்ல. ஸுகரூபமாகிற ப்ரஹ்மத்தினிடத்தில் கல்பிக்கப்பட்டபடியால், ஸ்வயமாக துக்கரூபமாயிருந் தாலும் ஸுகரூபமான அதிஷ்டானத்தினுடைய ஆச்ரயத்தால், தானும் ஸுகம் போல் தோன்றுகிறதே தவிர, வாஸ்தவமாய் விசாரிக்க ஸுகரூபமல்ல. இந்த லோகத்தில் ஸகலப் ப்ராணி களுக்கும் பூஜ்யாளான இந்திராதிகளான தேவச்ரேஷ்டர்களே ப்ரஹ்மரூபமான ஆனந்தத்தினுடைய திவலையினுடைய திவலையைத்தான் அடைந்திருக்கிறபடியால் தாங்களும் ஸுகரூபிகள் என்பதாக அஹங்காரத்தையடைந்து வருகிறார் கள். அவர்களுடைய ஸ்வரூபத்தையே உண்மையில் விசாரிக்க, துக்கவடிவாகவே ஆகிறார்கள். அவ்விதமிருக்க, இந்த பூலோகத் தில் அடிக்கடி ஜனன மரணத்தோடு கூடினவர்களான ப்ராணி

களுக்கு ஸுகம் என்ற லேசத்திற்கே அவகாசமில்லையல்லவா? ஆகையால், புத்ரன், ஸ்திரீ, பணம் இம்மூன்றுகளால் உண்டாகும் ஸுகம் போலொத்த ஸுகம்ப்ரஹ்மானுபவத்தில் உண்டாகுமோவென்று கேட்கவும் இந்த ஜீவகோடிகளுக்கு மனம் துணியுமா? 'ஸுகம்' என்ற பதார்தமே வேதாந்த ஸித்தமான ப்ரஹ்மம் ஒன்றேதான். அதனிடத்தில் ஸகல ஜகத்தும் கற்பிதமான படியால், கற்பிக்கப்பட்ட இந்த ஜகத்தில் அதிஷ்டானமாகிற தான் தொடர்ச்சியாய் ப்ரகாசித்து வருகிறபடியால் அந்த அதிஷ்டானமானகிற ஸுகரூப ப்ரஹ்மத்தின் ஸம்பந்தத்தால் மிகவும் துக்கரூபமான இப்ரபஞ்சம் ஸுகம் போல் தோன்றுகிறது. வாஸ்தவமாய் இப்ரபஞ்சம் துக்கமே. இவ்விதமான தாத்பர்யங்கள் அடங்கிய, அடியில் வருமாறு ஒரு ச்லோகத்தை ஸ்வானுபவத்தால் ஸ்ரீ சங்கர குருவானவர் வெளியிட்டிருக்கிறார்.

यत्सौख्याम्वुधिलेशलेशत इमे शक्रादयो निर्वृताः
यच्चित्ते नितरां प्रशान्तकलने लब्ध्वा मुनिर्निर्वृतः ।
यस्मिन्नित्यसुखाम्वुधौ गलितधीर्ब्रह्मैव न ब्रह्मवित्
यः कश्चित्स सुरेन्द्रवन्दितपदो नूनं मनीषा मम ॥ ५ ॥

यत्सौख्याम्वुधिलेशलेशतः, யாதொரு ப்ரஹ்மரூபமான ஆனந்தக் கடலினுடைய திவலையின் திவலையால்; इमे, இந்த; शक्रादयः, இந்த்ராதிகளான தேவர்களும்; निर्वृताः, ஸுகத்தோடு கூடினவர்களென்று அஹங்காரத்தையடைந்து வருகிறார்களோ; यत्, யாதொரு ப்ரஹ்மத்தை; नितरां, மிகவும்; प्रशान्तकलने, ஒழிவடைந்ததான ராகத்வேஷாதிகளோடு கூடின; चित्ते, மனதில்; लब्ध्वा, அறிந்து; मुनिः, மஹர்ஷியானவர்; निर्वृतः, ஸுகத்தையடைந்தவராக ஆகிறாரோ; यस्मिन्, யாதொரு; नित्यसुखाम्वुधौ, அழிவற்ற ப்ரஹ்மானந்தக் கடலில்; यः कश्चित्, யாதொருவன்; गलितधीः, முழுகினதான மனதோடு கூடினவனாக ஆகிறானோ; सः, அவன்; सुरेन्द्रवन्दितपदस्सन्, தேவேந்த்ரன்

முதலான தேவ ச்ரேஷ்டர்களால் கூட நமஸ்கரிக்கப்பட்ட பாதாரவிந்தத்தோடு கூடினவனாய்க் கொண்டு; ब्रह्मैव, ப்ரஹ்ம மாகவே; भवति, ஆகிறான்; ब्रह्मवित्, ப்ரஹ்மத்தை அறிந்த வனாக; न, இல்லை; सः, அவன்; गुरु, லோக குரு; इति, என்று; मम, என்னுடைய; मनीषा, ஸித்தாந்தம்; नूनम्, நிச்சயம்.

*தாத்பர்யம்:* இப்பிரபஞ்சத்தில் ஸுகத்தின் தாரதம் யத்தை விசாரிப்பதற்கோ, துக்கத்தின் தாரதம்யத்தை விசாரிப் பதற்கோ, இந்த மனுஷ ஜன்மாதான் எல்லை. மனுஷ்ய ஜன்மா முதல் ஹிரண்யகர்ப்பன் வரையில் ஸுகத்தின் தார தம்யம்; அவ்விதமே, மனுஷ்ய ஜன்மா முதல் ஸ்தம்ப மென்ற *(அதாவது)* சிற்றெரும்பு பர்யந்தம் துக்கத்தின் தார தம்யம். மானிட ஜன்மாவில் ஸுகத்தோடு கூடினவனென்று எவனைச் சொல்லலாம் என்றால் அடியிற் கண்டவாறு மகிமைகளை அடைந்தவனைத்தான் ஸுகத்தை அடைந்தவ னென்று சொல்ல வேண்டும். அதாவது, வயது பதினெட் டுக்கு மேல் முப்பதுக்குள் அடங்கின வயது, அதிலும் அழ கான சரீரம், அதிலும் ஸகல வேதங்களையும் சாஸ்த்ரங் களையும் தான் நன்றாய் படித்து அவைகளை அந்யர்களுக்கு போதிக்க வல்லமையான அறிவு, அதிலும் ஸகல ஜனங் களையும் நியமனம் செய்யும்படியான சக்தி, போகத்தை யனுபவிக்கக்கூடிய சக்தி மனோதைர்யம், தேஹபலம், ஸகல பூமண்டலமும் தன் வசத்திலிருப்பது. இவ்விதமான பெருமைகள் எல்லாம் ஒன்றுகூடக் குறையாமல் ஒரு புருஷ னுக்கு இருந்ததேயாகில், அவன் தான் ஸுகத்தோடு கூடினவ னென்று சொல்லத் தகுந்தவன். அவ்விதமான ஆனந்தத்தை தான் மானுஷ ஆனந்தமென்று சொல்லப்படும். இவ்வித மான ஆனந்தத்தில் நூறு மடங்குசேர்ந்தது மனுஷ்யகந்தர்வர் களுடைய ஆனந்தம். அதாவது பூலோகத்திற்கு மேலான லோகம் கந்தர்வ லோகமென்ற ஒரு லோகம். அந்த லோகத் தில் மனுஷ்யகந்தர்வர்களென்றும் தேவகந்தர்வர்களென்றும் இரண்டு பிரிவு. மனுஷ்யகந்தர்வர்களென்றால் பூலோகத்தில்

மனுஷ்யர்களாகப் பிறந்திருந்து வைதீகமான கர்மாவையும் பகவதாராதனத்தையும் செய்து வந்த இரண்டுவிதமான புண்யத்தால் மனுஷ்யசரீரம் போன பிற்பாடு தேவசரீரத் துடன் மேற்கண்ட கந்தர்வ லோகத்தில் போய் வஸிப்பவர் களை மனுஷ்யகந்தர்வர்களென்று சொல்லப்படும். தேவகந்தர் வர்கள் என்றால் ஹிரண்யகர்ப்பனால் ஸ்ருஷ்டியினுடைய ஆதியிலேயே தேவர்களாகவே ஸ்ருஷ்டிக்கப்பட்டு கந்தர்வ லோகத்தில் இருந்துவருகிறவர்கள். இந்த மனுஷ்யகந்தர்வர் கள், தேவகந்தர்வர்கள் இவர்களில், தேவகந்தர்வர்கள் மனுஷ்ய கந்தர்வர்களைக் காட்டிலும் நூறுமடங்கு மேலானவர்கள். மனுஷ்யகந்தர்வர்கள் இந்த பூலோகத்திலுள்ள மனுஷ்யர் களைக் காட்டிலும் மேலானவர்கள். ஆகையால், இந்த பூலோகத்தில் மேற்கண்ட மகிமைகளோடு கூடினவன் எவனோ அவனுடைய ஆனந்தம் மானுஷானந்தம் என்றும், அதில் நூறு பங்கு சேர்ந்த ஆனந்தம் மனுஷ்யகந்தர்வர்களுக்கு எவ் விதமாக ஆனந்தம் கூறப்படுகிறதோ, அவ்விதமான ஆனந் தத்தில் நூறு பங்கு சேர்ந்தது தேவகந்தர்வர்களின் ஆனந்தம். தேவகந்தர்வர்களுக்கு ஏற்பட்ட ஆனந்தத்தில் நூறு பங்கு சேர்ந்தது பித்ருக்களுக்கு. அதாவது, பூலோகத்திற்கு அப்பால் கந்தர்வ லோகம். அதற்கு மேல் லோகம் பித்ரு லோகமென்று சொல்லப்படும். அந்த லோகத்தில் வஸு, ருத்ரன், ஆதித்தன் என்று மூன்று பேர்கள் ஸ்ருஷ்டியினுடைய ஆதிகாலத்தி லேயே ஹிரண்யகர்ப்பனால் மனதால் ஸ்ருஷ்டிக்கப்பட்டு மேற்சொன்ன பித்ரு லோகத்தில் விளங்கிவருகிறவர்கள். அவர்களுடைய உத்யோகமாவது, இந்த லோகத்தில் எவ் விதம் ஒரு தேசத்திலுள்ள மனிதனுடைய வ்ருத்தாந்தங்களை மற்றொரு தேசத்திலுள்ள மனிதன் அறியக்கூடியதற்கு உப காரமாயும் ஒரு தேசத்திலுள்ள மனிதனும் மற்றொரு தேசத்திலுள்ள மனிதனும் ஒருவருக்கொருவன் தனக்குப் ப்ரிய மான வஸ்துக்களை அனுப்புவதற்கும் பெற்றுக் கொள்வதற் கும் உபகாரமாயிருக்கும்படி ''போஸ்டாபீஸ்'' என்றதாக ஒரு ஆபீஸ் ஏற்பட்டிருக்கிறதோ அவ்விதமே ஒரு லோகத்திலுள்ள

மனிதனுக்கும் மற்றொரு லோகத்திலுள்ள மனிதனுக்கும் ஒருவனுக்கொருவன் தன் தன் வ்ருத்தாந்தத்தை தெரிவித்துக் கொள்ளும்படிக்கும் ப்ரியமான வஸ்துக்களை அனுப்புவதற் கும் வாங்குவதற்கும் உபகாரமாயிருக்கும்படி ஏற்பட்டதான ஓர் ஸ்தானம் பித்ருலோகம் என்பது. அந்த லோகத்திற்கு அதி பதிகள் வஸு, ருத்ரன், ஆதித்தன் என்ற மூன்று நித்ய பித்ருக் கள். அவர்கள் மூன்று காலத்திலுமுள்ள ஸகல விஷயத்தையும் அறிந்து அனுபவிக்கும்படியான ஸர்வக்ஞ சக்தியுடையவர்கள். பூலோகத்தில் ஒரு மனிதன் தன் தகப்பன் மறித்த பிற்பாடு அந்த தகப்பனானவன் புண்ணிய லோகத்திலேயோ, பாப லோகத்திலோ, எந்த இடத்தில் இருக்கிறான் என்பதை இவ னுக்குத் தெரிந்து கொள்ள சக்தியில்லாதபடியால், தான் தன் தகப்பனை உத்தேசித்துக் கொடுத்து வரும் அன்னம், தக்ஷணை இவைகளை வஸு, ருத்திரன், ஆதித்தனாகிய இம்மூவர்கள் மூலமாய்க் கொடுத்து வருகிறான். இந்த பூலோகத்திலுள்ள மனிதனுடைய தகப்பன் மறித்த பிற்பாடு புண்ணிய லோகத் திலோ பாப லோகத்திலோ எந்த லோகத்தில் இருந்து வரு கிறானோ அந்த லோகத்தையும், அந்த இடத்தையும் தெரிந்து கொள்ள இம்மூன்று பித்ருக்களுக்கும் சக்தி உண்டு. அதா வது, ஒரு மனிதன் ஒரு க்ராமாந்தரத்திலுள்ள தன் ஸ்னேகித னுக்கு தன் விருத்தாந்தத்தை தெரிவிக்க ஒரு பத்ரிகை எழுதி னால் அந்த க்ராமாந்தரம் எந்த போஸ்டாபீஸில் சேர்ந்தது என்று தான் தெரிந்து கொள்ள முடியாமல், போஸ்டாபீஸில் அந்தப் பத்திரிகையைக் கொடுக்க அந்த போஸ்டாபீஸில் உள்ளவர்கள் இன்னின்ன ஜில்லாவில் இவ்வளவு போஸ்டா பீஸ்கள் *(ஹெட் ஆபீஸ், சப் ஆபீஸ், பிராஞ்சாபீஸ்கள் என்றும்)* இன்னின்ன பிராஞ்சாபீஸ்களில் இன்னின்ன க்ரா மங்கள் என்றும் விசிதமாய் விளக்கக்கூடிய போஸ்டாபீஸி லுள்ள புஸ்தகத்தைப் பார்த்து இந்த மனிதனுடைய பத்ரிகை எந்த போஸ்டாபீஸைச் சேர்ந்ததோ அந்த போஸ்டாபீஸைக் கண்டுபிடித்து எவ்விதம் அனுப்பி விடுகிறார்களோ அவ்விதமே மறித்த தன் பிதா எந்த இடத்தில் இருக்கிறார், என்ன

ஜாதியில் பிறந்திருக்கிறார், என்ன ஸ்திதியில் இருந்து வரு கிறார் என்ற விஷயத்தை பூலோகத்திலுள்ள மனிதனால் தெரிந்து கொள்ள முடியாது போனாலுங்கூட, இந்த பித்ரு லோகத்திற் கதிபதியான மேற்சொன்ன மூன்று பித்ருக்களும் இந்த ஸகல விஷயங்களையும் வேத ரஹஸ்யத்தை நோக்கி எல்லா வற்றையும் தெரிந்து கொள்ள ஸர்வக்ஞ சக்தியுடையவர்கள். ஆகையால்தான், வஸு, ருத்திரன், ஆதித்தன் என்ற மூன்று பித்ருக்கள் மூலமாக தன் பிதாவை உத்தேசித்து அன்னம், தக்ஷிணை முதலானவைகளை பிதா மறித்த தினத்தில் ஸகலரும் கொடுத்து வருகிறார்கள். இவ்விதமான பெரிதான உபகாரத் திற்காக ஏற்பட்ட லோகம் இந்த பிதிரு லோகம் என்பது. இந்த பிதிரு லோகத்திலுள்ள நித்திய பிதிருக்களுக்கு ஏற்பட்ட ஆனந்தம் தேவகந்தர்வர்களுடைய ஆனந்தத்தைப் போல் நூறு மடங்கு சேர்ந்துள்ளது. பித்ரு லோகத்திற்கு மேலான லோகம் ஸ்வர்க்க லோகம். அதில் ஆஜானஜாள் என்ற பெய ருடன் கூடிய தேவாள், கர்மதேவாள், தேவாள், இந்திரன், ப்ருஹஸ்பதி என்று ஐந்து வகை. இவ்வைந்து வகையில், ஆஜானஜதேவாள் என்பதாவது: ஆஜானம் என்றால் ஸ்வர்க்க லோகம். அதில், முதலில் பூலோகத்தில் மனுஷ்யர்களாக ஜனித்திருந்து, ஸ்ம்ருதியில் சொல்லப்பட்ட ஸந்த்யாவந் தனம், ஔபாஸனம், வைச்வதேவம் முதலிய கர்மாக்களை நன்றாக அனுஷ்டானம் செய்து அதின் ப்ராபவத்தால் தேவர் களாக ஜனித்தவர்கள், ஆஜானஜதேவாள் என்று சொல்லப் படும். கர்மதேவாள் என்பதாவது; அந்த ஸ்வர்க்க லோகத்தி லேயே முன்பு பூலோகத்தில் மனுஷ்யர்களாக ஜனித்திருந்து ச்ருதி என்ற வேதத்தில் சொல்லப்பட்ட அக்னி ஹோத்ரம், தர்ச பூர்ணமாஸ இஷ்டி, சாதுர்மாஸ்யம் முதலான கர்மாக் களை ஸரியாக அநுஷ்டானம் செய்து, அதின் ப்ராபவத்தால் தேவர்களாக ஜனித்தவர்கள். தேவாள் என்பதாவது முப்பத்து மூன்று பேர்கள், அதாவது பதினோரு ருத்ரர்கள், பன்னிரண்டு ஆதித்தர்கள், எட்டு வஸுக்கள், அச்வினீ தேவதைகள் இரண்டு பேர்கள், இம்முப்பத்து மூன்று பேர்களும் ஸ்ருஷ்டி

யின் ஆதிகாலத்திலேயே ஹிரண்யகர்ப்பனால் லோகத்தின் உபகாரத்தின் பொருட்டு மனதால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்கள். இம்முப்பத்துமூன்று பேர்களில் பன்னிரண்டு ஆதித்தர்கள் என்றவர்கள் பூலோகத்தில் புண்ணிய கர்மாக்களையே செய்து வருகிற ஜனங்களுடைய க்ஷேமத்தை அவரவர்களின் புண்ய கர்மாவுக்குத் தகுந்தபடி கொடுக்க வல்லவர்கள். அதாவது பூலோகத்திலுள்ள மனுஷ்யர்களின் புண்ய கர்மாவைப் பற்றி தீர்மானிக்கும் ஸ்வர்க்க லோகத்திலுள்ள ஸபையின் நியாயாதிபதிகள். பதினோரு ருத்ரர்கள் என்றவர்கள் ப்ராணிகளின் பாப கர்மாக்களைப் பற்றி தீர்மானிக்கும் ஸபையில் நியாயாதிபதிகள். எட்டு வஸுக்கள் என்றவர்கள் உபாஸனா மார்க்கத்தில் அதாவது பக்தி மார்க்கத்தில் இருந்து வரும் ஜனங்களுடைய பக்தியின் தாரதம்யத்தை விசாரிக்கும் ஸபையின் அதிபதிகள். இரண்டு அச்விநீ தேவதைகள் பூலோகத்தில் ஸம்ஸாரத்தில் வைராக்கியத்தையடைந்து நிவ்ருத்தி மார்க்கத்தில் இருந்து வரும் பிராணிகளின் ஞானத்தின் தாரதம்யத்தை விசாரிக்கும் ஸபையில் அத்யக்ஷர்கள். இந்த்ரன் என்பவர் இம்முப்பத்துமூன்று தேவர்களுக்கும் ஏற்பட்டதான கார்யங்களை அவரவர்கள் தங்கள் தங்கள் காரியத்தை ஸரியாய்ச் செய்து வருகிறார்களாவென்று கவனிக்கும் மேலதிகாரி. அதாவது, இம்முப்பத்துமூன்று தேவர்களையும் நான்கு பிரிவுகளாக பிரிக்கப்பட்டதல்லவா? ஒவ்வொரு பிரிவில் உள்ள ஒவ்வொரு தேவதையும் அவரவர்க்கு ஏற்பட்டதான லோகத்தின் க்ஷேமத்தை ஸரியாய் நடத்தி வருகிறார்களாவென்று அவர்களைப் பரீக்ஷிக்க வல்லமையுள்ளவனாயிருப்பதோடுங்கூட அந்தந்த தேவதைகளை அந்தந்த கார்யத்தில் நியமனமும் செய்யக்கூடியவன். பிரஹஸ்பதி என்பவர் இந்த்ரனுக்குக்கூட ஹிதோபதேசத்தைச் செய்து வருகிற ஆசார்யன். ஸ்வர்க்க லோகத்திலுள்ள இவ்வைந்து விதமான பிரிவுகளில் முதல் பிரிவிலுள்ளவர்களான ஆஜானஜ தேவாள் என்பவர்களுடைய ஆனந்தமானது மேற்சொன்ன நித்ய பித்ருக்களுடைய ஆனந்தத்தைக் காட்டிலும் நூறு மடங்கு அதிகமுள்ளது. இந்த

ஆஜானஜ தேவர்களுடைய ஆனந்தத்தைக் காட்டிலும் கர்ம தேவர்களுடைய ஆனந்தம் நூறு மடங்கு அதிகமுள்ளது. கர்மதேவர்களுடைய ஆனந்தத்தைக் காட்டிலும் தேவர் களுடைய ஆனந்தம் நூறு மடங்கு அதிகமுள்ளது. தேவர் களுடைய ஆனந்தத்தைக் காட்டிலும் இந்த்ரனுடைய ஆனந்தம் நூறு மடங்கு அதிகமுள்ளது. இந்த்ரனுடைய ஆனந்தத்தைக் காட்டிலும் ப்ருஹஸ்பதியினுடைய ஆனந்தம் நூறு மடங்கு அதிகமுள்ளது. இவ்விதம் ஸ்வர்க்க லோகத்தில் ஏற்பட்ட ஸுகத்தின் தாரதம்யம்.

இதற்கு மேலான லோகம் ப்ரஹ்மலோகமேயாம். இந்த ப்ரஹ்ம லோகத்திற்கு அதிபதி ப்ரஹ்மாவென்று சொல்லப் படுகிறது. இவன் தான் நான்கு முகமுள்ளவன். ஒவ்வொரு முகத்திலிருந்தும் ஒவ்வொரு வேதத்தையும் லோகத்தில் ப்ரசுரிக்கச் செய்தவன். அவ்விதமான ப்ரஹ்மாவுக்கு 'விராட்' என்று வேதாந்த சாஸ்த்ரப்ரகாரம் பெயர் ஏற்பட்டிருக்கிறது. இந்த விராட்டான ப்ரஹ்மாவினுடைய ஆனந்தம் ப்ருஹஸ்பதி யினுடைய ஆனந்தத்தைக்காட்டிலும் நூறு மடங்கு அதிகம் உள்ளது. அந்த விராட்டான ப்ரஹ்மாவைத்தான் ஸ்ருஷ்டி கர்த்தாவென்று சொல்லப்படும். அந்த ப்ரஹ்மாவுக்கு மேலாக, எவ்விதம் கண்ணாடியில் ஒரு புருஷனுடைய ப்ரதி பிம்பம் தெரியுமோ அவ்விதமே, ஸத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்ற மூன்று குணத்தோடு கூடிய மாயை யாகிற கண்ணாடியில் ப்ரதிபிம்பிக்கும் அளவற்ற ஆனந்த ரூபமான ப்ரஹ்மஸ்வரூபத்தின் ப்ரதிபிம்பத்தை சூத்ர ஆத்மா வென்று சொல்லப்படும். வேதாந்திகள் ஹிரண்யகர்ப்ப னென்று சொல்வார்கள். இவ்விதம் மாயையில் வீசுகிற ப்ரஹ்ம ப்ரதிபிம்ப ரூபமான ஹிரண்யகர்ப்பன் என்று பெயருடைய ஸகுணப் ப்ரஹ்மத்தின் ஆனந்தம் *(விராட்)* என்ற ப்ரஹ்மா வினுடைய ஆனந்தத்தைக் காட்டிலும் நூறு மடங்குள்ளது. இவ்விதம் மனுஷ்யானந்தம் முதல் ஹிரண்யகர்ப்பனுடைய ஆனந்தம் வரையில் பதினோரு விதமாக தாரதம்யத்தை

சாஸ்த்ரம் கூறுகிறது. இந்தப் பதினோரு விதமான ஆனந்தத்திலும் மேலான ஆனந்தம் ஹிரண்யகர்ப்பனுடைய ஆனந்தமல்லவா? அவ்விதம் மேலான ஹிரண்யகர்ப்பனுடைய ஆனந்தமும் அளவற்ற ப்ரஹ்மானந்தக் கடலினுடைய திவலையின் திவலையில் லேசம் என்று சாஸ்த்ரத்தால் கூறப்படுகிறது. இந்தப் பதினோரு விதமான ஆனந்தமும் அழிவுள்ள ஆனந்தம். ப்ரஹ்மரூபமான ஆனந்தம் ஒன்றே அளவற்றது, அழிவில்லாதது. உலகத்திலேயே எந்தெந்த பதார்த்தம் ஸுகத்தைக் கொடுக்கக்கூடியதென்று தோன்றுகிறதோ அந்தந்த பதார்த்தங்கள்தான் ஸ்வயமாகவே ஸுகத்தைக் கொடுக்கும் வல்லமையோடு கூடினவைகளல்ல. ஆனால் ஸுகரூபமான ப்ரஹ்மமானது எல்லாவற்றிலும் நிறைந்த வஸ்துவானபடியால் அதின் ஸம்பந்தத்தால் ஸுகத்தைக் கொடுக்கக் கூடிய வல்லமையுள்ளவைகள் போல அவிவேகிக்குத் தோன்றுகிறது. ஸுகம் என்ற வஸ்து ப்ரஹ்மம் ஒன்றே தவிர மற்ற வஸ்துக்கள் ஆகாது. அதிருசியுள்ள கரும்பின் ரஸத்தை கீழான தகரப் பாத்ரத்தில் எடுத்து சாப்பிடுவது போல் ஸுகமாகிற ப்ரஹ்மம் என்ற ரஸத்தை புத்ரன், ஸ்த்ரீ, பணம் என்ற மூன்று விதமான நச்வரமான பதார்த்தங்கள் மூலமாக சாப்பிட யத்னம் செய்கிறவன் அவிவேகியல்லவா? ப்ரம்மானந்த ரஸத்தை தானாகவே மற்றொரு பதார்த்தத்தின் அபேக்ஷையன்னியிலேயே சாப்பிட யத்னம் செய்ய வேண்டியதென்றதுதான் வேதாந்த சாஸ்த்ரத்தின் அந்தரங்கமான கொள்கை ஸமுத்ரத்தில் அளவற்றதாயிருக்கும் ஜலத்தை ஒரு சிறிய பாத்ரத்தில் எடுத்தால், பாத்ரம் அளவுள்ளதானபடியால் அதிலுள்ள ஜலமும் அளவுள்ளதாகவும் ஏற்படுமல்லவா? அதுபோல் அளவற்றதான ப்ரஹ்மானந்தமாகிற கடலில் அளவுள்ள புத்ரன், பார்யை, பணம் என்பதாகிற சிறிய பாத்ரங்களால் எடுக்கப்படும் ஆனந்தமாகிற ஜலமும் அளவுள்ளதாக ஏற்படுமல்லவா? தவிர இம்மூன்று விதமான பாத்ரங்களின் தோஷத்தால் தோஷமுள்ளதாகவும் ஏற்படும். இதைக் காட்டிலும் ப்ரஹ்மானந்தக் கடலிலேயே ஆனந்தத்தை

யனுபவிப்பது மிகவும் உத்க்ருஷ்டமல்லவா? ஆகையால் இவ்விதமான அளவற்ற ப்ரஹ்மானந்தத்தினுடைய க்லேசத்தில் க்லேசமென்று தேவதேவனான ஹிரண்யகர்ப்பனுடைய ஆனந்தத்தைக்கூட ச்ருதியால் எப்பொழுது வர்ணிக்கப்படுகிறதோ அப்பொழுது இந்தப் பூலோகத்திலுள்ள மனுஷ்யர்களுக்கு சற்றேனும் ஆனந்தம் கிடையாதென்பதில் ஆக்ஷேபணையில்லை. ஆகையால், இவ்விதமிருக்க புத்ரன், பணம், பார்யை இவ்விதமான பதார்த்தங்களால் உண்டாகும் ஸுகத்திற்கு ஸமானமான ஸுகம் ப்ரஹ்மாத்மவனுபவத்தில் கிடைக்குமோவென்ற கேள்விக்கு சற்றேனுமிடமில்லை அல்லவா? ஆகையால் ப்ரஹ்ம ஸுகமே பரமஸுகம். ஆனாலும் ப்ரஹ்மஸுகம் கிடைக்கும் வழி என்னவென்றால் அடியிற் கண்டவாறு.

/ ப்ரஹ்ம ஸுகமென்பது அமிர்தக் கடல். இந்த அம்ருதக் கடலானது உப்புக்கடல், கரும்புரஸக்கடல், மத்யக்கடல், நெய்க்கடல், தயிர்க்கடல், பாற்கடல் இவ்விதம் ஆறுவிதமான கடலுக்கு அப்பாலுள்ளது? ஒரு கடலையே மனிதர்களால் தாண்ட முடியாமலிருக்கையில் ஆறு கடலையும் தாண்டிக் கொண்டு அம்ருதக் கடலை மனிதர்கள் கண்டுபிடிப்பது அரிதல்லவா? அவ்விதம் புத்ரன், பார்யை, பணம் இம்மூன்று பதார்த்தங்களும் ஒரு ஸமுத்ரமாய் விளங்குகிறது. இவைகளைத் தாண்டுவதே அரிது. அவ்விதம் தாண்டினாலும், அப்பால் சரீரம் (அதாவது தன் தேஹம்); அதைத் தாண்டுவது மிகவும் அரிது; அதைத் தாண்டினாலும், அப்பால் ப்ராணன்; அதற்கப்பால் மனது; அதற்கப்பால் புத்தி; அதற்கப்பால் ஒவ்வொரு பதார்த்தமாக பரிணமித்த மனோவ்ருத்தியில் ப்ரதிபிம்பிக்கும் ஆனந்தமாகிற ஆனந்த கோசம்; இவ்விதம் ஆறும், ஆறு கடல்களைப்போல அளவற்றதான அபிமானமென்ற ஜலத்தால் நிறைந்தது.

அவ்விதமான ஆறு கடல்களைக் காட்டிலும் ப்ரஹ்மானந்தக் கடல் அப்பாலுள்ளது. ஆகையால் ப்ரஹ்மானந்

த்தை அடைவது அறிதுதான். ஆனாலும், எவ்விதம் மிகவும் திடமான தோணியை அடைந்தவன் ஆறு கடல்களையும் தாண்டிக் கொண்டு ஏழாவதான அம்ருதக் கடலையும் லகுவாய் அடைவனோ அவ்விதமே ஸத்குருவினுடைய உபதேசத்தால், புத்ராதிகள், அன்னகோசம், ப்ராணகோசம், மனோகோசம், விக்ஞானகோசம், ஆனந்தகோசம் என்ற ஆறுவிதமான அனாத்மவர்க்கங்களை மனதால் நினைக்காமல் இந்த ஆறு விதமான அனாத்மவர்க்கங்களும் எந்த ப்ரஹ்மம் என்ற வஸ்து வினிடத்தில் கல்பிதமோ அவ்விதமான ப்ரஹ்மாகாரமாகவே இந்த மனதை இடைவிடாமல் பரிணமிக்கும்படியாய்ச் செய்யக் கூடிய பாக்யத்தையடைந்து, அவ்விதமான ப்ரஹ்மாகார மனோவ்ருத்தியாகிற தோணியைக் கைக்கொண்டால் இந்த ஆறுவிதமான அனாத்ம வர்க்கங்களைத் தாண்டி ஆத்ம ரூப மான ப்ரஹ்மானந்தக் கடலை லகுவாய்க் கண்டு திவ்ய ஸுகத்தையடைந்து விடலாமென்பதில் யாதொரு ஸந்தேஹமு மில்லை. தேஹாதிகளில் அனாதியாயிருக்கும் அபிமானத்தை, தேஹத்திற்கும் தனக்கும் யாதொரு விதமான ஸம்பந்தமும் ஏற்பட ந்யாயமில்லாதபடியால் அபிமானத்தை வைப்பதற்குக் காரணம் அஞ்ஞானமே தான் என்ற பாவத்தால் அபிமானத்தை ஒதுக்கித்தள்ளிவிட்டு தேஹத்தைக் காட்டிலும் தான் *(ஆத்மா)* வேறுபட்டவனாகிற பாவம் *(எண்ணம்)* எப்பொழுது ஏற்படு கிறதோ அப்பொழுதே ப்ரஹ்மானந்த ஆவிர்பாவம் ஏற்படு வது நிச்சயம். ஆத்மாவுக்கும் தேஹத்திற்கும் யாதொரு ஸம்பந்த மும் இல்லையென்று அடியிற் கண்டவாறு விசாரம் செய்ய வேண்டும். அதாவது

**देहः किं अन्नदातुस्वं निषेक्तुः मातुरेववा मातुःपितुः क्रेतुर्वा बलिनः अग्नेः शुनोऽपि वा ।**

**देहः**, *இந்த சரீரமானது;* **स्वम्**, *தன்னைச் சேர்ந்ததா?* **अन्नदातुः**, *ராஜாவினுடைய;* **किं स्वम्**, *சொத்தா?* **निषेक्तुः**, *பிதாவினுடை யதா?* **मातुः**, *மாதாவினுடையதா?* **मातुःपितुः**, *மாதாவைப்*

பெற்ற பாட்டனாருடையதா? क्रेतुः, மாமனாருடையதா? अग्नेः, அக்கினியினுடையதா? वलिनः, காக்கையினுடையதா? शुनोऽपि वा, நாயினுடையதா?

அதாவது, இந்த தேஹம் என்ற சொத்தைப் பற்றி வேதாந்தமென்ற விவாதம் கோர்ட்டில் ஏற்பட்டு தீர்ப்பா யிருப்பது என்னவென்றால் அடியிற் கண்டவாறு:—

வேதாந்த சாஸ்த்ரமென்ற கோர்ட்டில் அதின் ஸித்தாந்த கர்த்தாவான ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகளவர்களாகிற ஜட்ஜ் அவர்கள் முன்பாக இந்த தேஹத்தைப் பற்றிய கேஸ் நடந்து வந்தது. இந்த ஜீவன் இந்த தேஹத்தை தான் அனு பவித்துவர அநேக விதமான விரோதிகளின் தடையேற்படு வதால் அதைத் தீர்த்துக் கொள்ள இந்த தேஹம் தன்னைச் சேர்ந்தது என்ற விஷயத்தையும், அதற்கு அத்தாக்ஷி அனாதி காலமாய் தான் அனுபவித்துவருவதேதான் என்பதையும் நன்றாய் விளக்கி ஒரு பிராது காப்பி தயார் செய்து ஸகலத்தை யும் அறிந்தவரான கர்மகாண்ட ஸித்தாந்த கர்த்தவான ஜைமினி ஆசார்யாளாகிய வக்கீல் மூலமாக மேற்கண்ட கோர்ட்டில் கொடுக்கும்படி செய்து, தான் அதில் வாதியாக இருந்து வந்தான். அவனுக்கு ப்ரதிவாதிகளாய் அந்த கேஸை ஆக்ஷே பித்து ஜீவனுடைய அநுபவத்திற்கு விடக்கூடாதென்பதாய் ப்ரதிவாதம் செய்தவர்களில் முதல் ப்ரதிவாதி ராஜா. முதல் ப்ரதிவாதியினுடைய ஆக்ஷேபணையாவது:— நான் இந்த பூமண்டலத்திற்கு அதிபதியானபடியால் இந்த பூமண்டலத் திலுள்ள தான்யங்கள் முதலான ஸகல சொத்துக்களும் என்னைச் சேர்ந்தது. ஆகையால் என்னுடைய அன்னத்தால் ஜனித்து, என்னுடைய அன்னத்தாலேயே வளர்ந்து வருகிற தான இந்த தேஹத்திற்கு யஜமானன் நானே. எனக்கே அதில் ஸர்வஸ்வாதந் த்ரியத்தை கோர்ட்டார் தயவு செய்து ஏற்பாடு செய்ய வேண்டும். வாதியான ஜீவனுக்கு ஒரு விதத்திலும் ஸம்பந்தமில்லை. அன்னத்தால்தான் இந்த தேஹம் உண்டா

கிறது. அதனால் தான் வளருகிறது என்ற விஷயத்தில் அடியிற் கண்ட ஸ்ம்ருதியே ப்ரமாணம்.

अन्नात्संजायते देहः अन्नेनैव विवर्धते

देहः, தேஹமானது; अन्नात्, அன்னத்தினாலே; संजायते, உண்டாகிறது; अन्नेनैव, அன்னத்தினாலேதான்; विवर्धते, வ்ருத்தி யடைகிறது.

ஆகையால், இந்த தேஹம் அன்னத்தின் கார்யம், அன்னத்திற்கோ ஸ்வாமி *(யஜமானன்)* நான் தான். ஆகையால், இவ்விதமான விஷயங்களை நன்றாய் விசாரித்து என்னுடைய அனுபவத்திற்கு இந்த தேஹத்தை தீர்ப்பு செய்ய வேணுமாய்க் கோர்ட்டார் முன்பாக வணக்கத்துடன் இந்த ப்ரதிவாதியால் ப்ரார்த்திக்கப்படுகிறது. இரண்டாவது ப்ரதி வாதி தகப்பன். அவனுடைய ஆக்ஷேபணையாவது: என்னுடைய வீர்யத்தால் இந்த தேஹம் உண்டு பண்ணப்பட்ட படியாலும், அதில் கர்ப்பாதானம் என்ற சாஸ்த்ரத்தில் கூறிய ஸம்ஸ்காரத்தில் ஒன்றான கர்மாவே அத்தாக்ஷியான படியாலும் அந்த கர்மாவைச் செய்தது நானே என்ற விஷயத்தில் இந்த வாதியின் தாயே முக்யமான சாக்ஷியானபடியாலும், என் வசமே இந்த தேஹம் ஏற்பட வேண்டியது ஆவச்யகம். முதல் ப்ரதிவாதியான ராஜாவினுடைய ஆக்ஷேபணை ஸரியான ஆக்ஷேபணையல்ல. அன்னத்தால் தேஹம் உண்டாகின்றதல்ல; அன்னத்தாலுண்டாகிற வீர்யத்தால் தான் தேஹம் உண்டாகிறதென்பது அனுபவஸித்தம். அதற்கு ப்ரமாணம்;

पितृभुक्तान्नजात् वीर्यात् जातोऽन्नेनैव वर्धते ।

என்ற வாக்யம் தான். வளர்வதற்கு அன்னம் முக்யமான காரணமாயிருந்தாலும், தேஹம் உண்டாவதற்குக் காரணம் வீர்யம் தான். ஆகையால் கோர்ட்டார் தயவு செய்து இது விஷயத்தை தெளிவாய் விசாரித்து என் வசத்தில் தேஹத்தை விடும்படி

செய்வதற்கு உத்தரவாகக் கோருகிறேன். மூன்றாவது ப்ரதி வாதியான தாயின் ஆக்ஷேபணையாவது: இந்த தேஹத்தை நான் என்னுடைய குக்ஷியில் சுமார் பத்து மாத காலமாக தரித்து விட்டுப் பின்பும் கொஞ்ச நாள் பர்யந்தம் என் ஸம்ரக்ஷணை யிலேயே இருந்து வந்த விஷயம் லோக ப்ரஸித்தம், ஆகை யால் இந்த தேஹம் வாஸ்தவத்தில் விசாரிக்க என்னுடை யதே. இவ்விதம் தாயின் ஆக்ஷேபணை. தாயைப் பெற்ற தகப்பனானவன், அதாவது, இந்த தேஹத்திற்கு மாதா மகன் என்று சொல்லப்பட்டவன் நான்காவது ப்ரதிவாதி. அவனு டைய ஆக்ஷேபணையாவது: இந்த தேஹத்தை குக்ஷியில் தரித்து உண்டு பண்ணின தாயின் தேஹத்தை நான் உண்டு பண்ணினவனானபடியால் நான் உண்டு பண்ணின தேஹத் தின் கிளையான தேஹம் என் வசம் என்பதற்கு ஆக்ஷேபணை உண்டோ? ஆகையால் என்னுடைய ஸ்வாதீனத்தில் என் தேகத்தை தீர்ப்பு செய்ய வேணுமாய்க் கேட்டுக் கொள்ளு கிறேன். இவ்விதம் நான்காவது ப்ரதிவாதியின் ஆக்ஷேபணை. ஐந்தாவது ப்ரதிவாதி, இந்த சரீரத்தை ஸ்வீகாரம் செய்து கொண்டவன்; அல்லது தான் தன்னுடைய சிலது த்ரவ்யத்தையும் பெண்ணையும் கொடுத்து இந்த சரீரத்தை தனக்கு ஸம்பந்தமுள்ளதாகச் செய்து கொண்ட மாமனார் என்றவராவது; இவ்விருவர்களும் இந்த சரீரம் தங்கள் தங்க ளால் இன்ன காலத்தில் த்ரவ்ய மூலம் வாங்கப்பட்டபடி யால் தங்கள் சொத்தென்பதே உண்மையென்பது இவர் களுடைய ஆக்ஷேபம். ஆறாவது ப்ரதிவாதி அக்னி. அவ னுடைய ஆக்ஷேபணையாவது, இந்த தேஹத்தில் ப்ராண வாயு உள்ள பர்யந்தம் என்னுடையது உன்னுடையது என்ற ஸ்வதந்த்ரம் பாராட்டிக் கொண்டு வந்தாலும், ப்ராண வாயு விலகினவுடன் அதாவது கடைசி காலத்தில் ஸ்வதந்த்ரம் பாராட்டிக் கொண்டிருந்தவர்களே என்னுடைய வசத்தில் விட்டு விடுகிறார்கள் என்பது உலகத்தில் ப்ரஸித்தம். ஆகையால் ஒருவரும் தன்னுடையதென்று அபிமானம் வைக்கத்தகாத காலத்தில் நான் இந்த தேஹத்திற்கு பரமபந்துவாக ஏற்பட்டுக்

காப்பாற்றி வருகிறவனானபடியால் அதற்கு முன்காலத்திலும் என் ஸ்வாதந்தர்யத்தில் இருப்பதுதான் ந்யாயத்திற்கு ஏற்றது. அவ்விதமே ஸமூஹத்தில் தீர்ப்பாக வேணுமாய்க் கோருகிறேன். ஏழாவது ப்ரதிவாதிகள் காக்கைகளும், நாய்களும். அவைகளின் ஆக்ஷேபணையாவது:— இந்த தேஹம் தன் க்ரஹத்திலேயே அதிலும் தன்னைச் சேர்ந்தவர்களின் எதிரிலேயே மரிப்பதென்று நிச்சயமுண்டோ? அவ்விதம் நிச்சயமிருந்தால் கடைசி காலத்தில் அக்னியின் வசமாவது நிச்சயம். அவ்விதம் நிச்சயம் ஏற்பட முடியாதல்லவா? எங்கேயாவது தான் போனவிடத்தில் இந்த தேஹத்திற்கு மரணமேற்படுவதாயிருந்தால் அந்த ஸமயத்தில் நாங்களே அதைக் காப்பாற்றி அதைப் புஜிக்கும்படி நேரிடுகிறதல்லவா? ஆகையால் எங்கள் வசமென்றே தீர்மானிக்கக் கோருகிறேன். இவ்விதம் ஏழுவிதமான ப்ரதிவாதிகள் வாதியான ஜீவனுடைய சொத்தல்ல இந்த சரீரம் என்றதில் அநேக யுக்திகளால் ஆக்ஷேபணை செய்து தன் தன் எதிர்வாதத்தால் தடுத்து வருகிறார்கள். இவர்களுக்கு ஞான காண்டத்தை ப்ரசுரம் செய்த பகவான் வ்யாஸாசார்யாள் என்ற மஹானுபாவர் கோர்ட்டில் ஆஜராய் ப்ரதிவாதம் செய்தார். இவ்விதம் வாதியான ஜீவனுக்காக ஆஜராயிருக்கிற ஜெய்மினி ஆசார்யாளும் ப்ரதிவாதிகளுக்காக ஆஜராயிருந்த வ்யாஸாசார்யாரும் ஆகிய இவ்விருவரும் வாதிக்க வரும் பொழுது இரண்டு பேர்களுடைய வாதங்களிலும் யுக்திகள் உசிதமாகவே இருந்து வந்தன. அவரவர்களின் காரணம் ஸரியான காரணமாகவே இருக்கின்றன. இவ்விதமான கேஸில் ஜட்ஜ் ஆன ஶ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளால் தீர்மானிக்கப்பட்டவதாவது:—

यदुद्दिश्य मिथो वादं कुर्वतोः युक्तयः समाः
तद्विभज्य तयोर्दद्यादिति मन्वादि शासनम् ॥
अविभज्य पदार्थश्चेत् किं जडश्चेतनोऽथवा ।
विचार्य तदभिप्रायं चेतनो यदि लिख्यताम्
जडश्चेत् राजकीयः सः नात्र कार्या विचारणा ॥

यत्, யாதொரு வஸ்துவை; उद्दिश्य, முன்னிட்டுக் கொண்டு; वादम्, என்னுடையது, உன்னுடையது என்ற விவாதத்தை; कुर्वतः, செய்து வருகிறதான வாதி ப்ரதிவாதிகளுடைய; युक्तयः, காரணங்கள்; समाः, ஸமானமாகவேயிருக்கின்றவோ; तत्, அந்த சொத்தை; विभज्य, இரண்டு பாகமாய்ச் செய்து; तयोः, அந்த வாதி ப்ரதிவாதி இரண்டு பேர்களுக்கும்; दद्यात्, கொடுக்க வேண்டும்; इति, என்று; मन्वादिशासनम्, மனு முதலான ஸ்ம்ருதி கர்த்தாக்களின் கட்டளை; अविभज्य पदार्थश्चेत्, அந்தச் சொத்தானது பிரிக்கக் கூடாத சொத்தாயிருந்ததேயானால்; सः, அந்த பதார்த்தமானது; किं जडः, ஜடமா? अथवा चेतना, அல்லது சேதனமா? इति, என்று; विचार्य, விசாரித்து; चेतनो यदि, சேதன மாயிருந்ததேயானால்; तदभिप्रायम्, அதனுடைய அபிப்ராயத்தை; लिख्यताम्, எழுத வேண்டும்; जडश्चेत्, ஜடமாயிருந்தால்; सः, அந்த பதார்த்தமானது; राजकीयः, ராஜாவைச் சேர்ந்தது; अत्र, இந்த விஷயத்தில்; विचारणा, விசாரணையானது; न कार्या, செய்யக் கூடாது.

அதாவது, ஒரு சொத்தை உத்தேசித்து இரண்டு பேர்கள் தன்னுடையதென வாதம் செய்தார்களானால் அவ்விரு வர்களுடைய காரணங்கள் சரிஸமானமாயிருந்தால் அவ்விரு வர்களுக்கும் அந்த சொத்தை இரண்டு பாகமாய்ப் பிரித்துக் கொடுத்துவிட வேண்டும். பிரிக்கக் கூடாத சொத்தானால் அந்த சொத்து அறிவுள்ள சொத்தா? அல்லது அறிவில்லாத ஜடமான சொத்தாவென்பதை விசாரிக்க வேண்டும். அவ் விதம் விசாரித்து அறிவுள்ள சொத்தாயிருந்தால் அந்த சொத்தின் அபிப்ராயப் ப்ரகாரமாகவே தீர்மானிக்க வேண்டும். அறி வில்லாத சொத்தாயிருந்தால் ராஜாங்கத்தில் சேர்த்துவிட வேண் டும் என்ற ந்யாயங்களைக் காரணமாய்க் காட்டி இந்த தேஹம் என்ற சொத்தானது இப்பிரபஞ்சத்தை ஆண்டு வரும் ஸத்வ குணம், ரஜோ குணம், தமோ குணம் என்ற மூன்று குணத்

தோடு கூடின அவித்யை என்ற மஹாராணியின் வசமாகவே தீர்மானிக்கப்பட்டது. ஆகையால் இவ்விதமான சாஸ்த்ரங்களின் அபிப்ராயத்தை ஆராய்ந்து பார்க்க, இந்த தேஹத்தில் சற்றேனும் தன்னுடையதென்று அபிமானம் வைக்க இடமுண்டோ? ராஜாங்கத்தின் சொத்தை தன்னுடையதென்று அனுபவிக்க முயற்சி செய்தால் அவனுக்கு சாஸ்த்ரப்படி தண்டனையல்லவா விதிக்கப்பட்டிருக்கிறது. 'அவித்யை' யென்ற மஹாராணியைச் சேர்ந்த இந்த தேஹமாகிற சொத்தை தன்னுடையதென்று பரிபாலனம் செய்ய முயற்சியை செய்கிறவன் தண்டிக்கத் தகுந்தவன் என்பதில் ஆக்ஷேபணையுண்டோ? ஆகையால் ராஜாவின் சொத்தை முன்னிட்டு, வாதியான ஜீவன், ப்ரதிவாதிகளான மேற்கண்ட ஏழு பேர்கள், இவர்கள் ஒருவருக்கொருவர் தன்னுடையது தன்னுடை யது என்ற வாதங்களைச் செய்வது சட்டத்திற்கு மிகவும் விரோதமல்லவா? ராஜாவினுடைய சொத்தில் ஆசையை வைத்த வாதி ஒருவன், ப்ரதிவாதிகள் ஏழு பேர்கள் ஆகிய எட்டுப் பேர்களும்,

राजकीयधनेच्छावान् सप्तजन्मसु रौरवम् ।
प्रयाति स वहिष्कार्यः साधुभिः सत्सभांगणे ॥

राजकीयधनेच्छावान्, அகாரணமாய் ராஜாவினுடைய சொத்தில் இச்சையுள்ளவன்; सप्तजन्मसु, ஏழு ஜன்மங்களில்; रौरवम्, ரௌரவம் என்ற நரகத்தை; प्रयाति, அடைகிறான்; सः, அவன்; साधुभिः, ஸாதுக்களால்; सत्सभाङ्गणे, ஸாது ஸமாஜம் கூடும் இடத்தில் சேர்க்கவிடாமல்; वहिष्कार्यः, தள்ளத் தகுந்தவன், அதாவது

அகாரணமாய் ராஜ சொத்தை அடைய வேண்டுமென்று இச்சையை யடைந்தவன்கூட ஏழு ஜன்மாக்களில் நரகத்தை அடைகிறான். அவனிடத்தில் ஸாதுக்கள் பராமுகத்தையுடையவர்களாக இருக்கிறார்கள் என்ற அபிப்ராயத்தைக் காட்டுகிற சட்டப்படி ஏழு ஜன்மா, மேற்கண்ட எட்டுப்

*பேர்களும், அகாரணமாய் ராஜ சொத்தையடைய வேண்டு மென்ற (பேராசை) பேராக்ரஹத்தையடைந்த காரணத்தால் ரௌரவம் என்ற முதலாவதான காராக்ரஹத்தில் வஸிக்கத் தகுந்தவர்களென்றும் தீர்மானிக்கப்பட்டது. இவ்விதமான விஷயங்களைச் சற்று ஆராய்ந்து பார்த்தால் தேஹத்தின் மீது வைக்கும் அபிமானத்தால் உண்டாகும் பலனை நன்றாய்த் தெரிந்து கொள்ளலாம். இவ்விதம் தேஹாதிகளை துச்சமென்று பாவித்து அந்த தேஹாதிகளில் மனதிற்கு ப்ரவ்ருத்தியை ஒரு ஸமயத்திலும் கொடுக்காமல், இந்த தேஹாதிகள் எந்த ஆனந்தரூபமான ப்ரஹ்மத்தினிடத்தில் கல்பிதமோ, அந்த ஆனந்தரூபமான ப்ரஹ்மத்தினிடத்தில் மனதை ப்ரவ்ருத்திக்கச் செய்து, ஆனந்த ரூபமான ப்ரஹ்மாகாரமாகவே பரிணமிக்கிர தான ப்ரஹ்மாநுஸந்தானமாகிற தோணியைக் கைக்கொண் டால் புத்ரன், பார்யை, பணம் என்ற முதல் கடல், அன்ன கோசமென்ற இரண்டாவது கடல், ப்ராணகோசமென்ற மூன்றாவது கடல், மனோகோசம் என்ற நான்காவது கடல், விக்ஞான கோசமென்ற ஐந்தாவது கடல், ஆனந்தகோச மென்ற ஆறாவது கடல், இந்த ஆறுவிதமான கடலையும் லகுவாய்த் தாண்டி அளவற்ற ப்ரஹ்மானந்தக் கடலை அடைந்து விடலாமென்பது நிச்சயம். இவ்வித அளவற்ற ப்ரஹ்மானந்தக் கடலிலேயே எப்பொழுதும் வஸித்து வரும் ஸ்வபாவமுள்ள ஜீவனை பலாத்காரமாக இந்த ஆறுவித மான கடலுக்கப்பால் இழுத்துக் கொண்டு வந்து ப்ரமத்தை (மயக்கத்தை) யடையும்படி செய்கிற துஷ்டன் மனதல்லவா?*

**मन एव मनुष्याणां कारणं वन्धमोक्षयोः**

**वन्धमोक्षयोः**, *பந்தமோக்ஷங்களின்;* **कारणं**, *காரணம்;* **मन एव**, *மனதுதான்.*

*அதாவது, மனது ஒன்றுதான் பந்தத்திற்கும் மோக்ஷத் திற்கும் காரணம் என்ற சாஸ்திரப்படி, இவ்விதம் ஜீவனுக்கேற் பட்ட ஆபத்திற்குக் காரணம் மனதுதான். அந்த மனதிற்குத்*

தான் மறுபடியும் ஆறு கடலுக்கப்பாலுள்ள அளவற்ற ப்ரஹ்மானந்தக் கடலுக்குப் போக வழியும் தெரியும். மனதைக் கைவிட்டால் ஜீவன் ஸ்வயமாக தன்னுடைய ப்ரஹ்மானந்தக் கடலைப் போய்ச்சேர சக்தியில்லாதவன் என்பது நிச்சயம். ஆகையால் மனதைக் கைவிடாமல் அதை நயந்து கொண்டு ஸன்மார்க்கத்தில் திருப்பி அதனுடைய தயவால் தன்னுடைய ப்ரஹ்மானந்தக் கடலைப் போய்ச்சேர்ந்து தனது ப்ரஹ்மானந்த கடலை அடைந்தவுடன் அந்த மனதை உபேக்ஷித்தால் மறுபடியும் ப்ரஹ்மானந்தக் கடலினின்றும் வெளியில் இழுத்துக் கொண்டு வந்து விடுமோ என்ற பயத்தால் அந்த ப்ரஹ்மானந்தக் கடலிலேயே மனதை முழுகும்படி செய்து அந்தக் கடலிலேயே மனோ நாசம் வரும்படியும் செய்ய வேண்டும்; இவ்விதம், எவன் யாதொரு ப்ரஹ்மத்தினிடத்தில் மனதை ஐக்யப்படுத்தி தானே அந்த ப்ரஹ்மம், அந்த ப்ரஹ்மமே தான் என்ற அனுபவத்தின் பரமகாஷ்டையை அதாவது எல்லையடைந்தவனோ, அவன் எந்த ஜாதியில் எந்த குலத்தில் பிறந்தவனாய் இருந்தாலும் அந்த ஆனந்த ரூபமான ப்ரஹ்மமேயன்றி ப்ரஹ்மத்தையறிந்தவனென்று சொல்லத் தகுந்தவனல்லன். அவன் ஸ்வயம் ப்ரஹ்மமேயான படியால் இந்த்ராதிகளான தேவர்களால் கூட பூஜிக்கத்தகுந்த பாத கமலத்தோடு கூடினவன். ஆனந்தரூபமான ப்ரஹ்மத்தினுடைய லேசத்தில் லேசத்தால் அல்லவா இந்த்ராதி தேவர்களும் ஆனந்தத்தோடு கூடியவர்களென்று சொல்லப்பட்டது. இந்த்ராதி தேவர்கள் ஆனந்த ரூபமான ப்ரஹ்மத்திற்கு கீழ்படிந்தவர்களல்லவா? மேற்கண்டபடி இவ்விதம் ப்ரஹ்மாநுபவத்தை யடைந்தவன் எவனோ அவனும் ஸ்வயம் ப்ரஹ்மமானதால் அவனுக்கு இந்த்ராதி தேவர்கள் கீழ்ப்படிந்தவர்கள் என்பதில் ஸந்தேஹமில்லை. எப்பொழுது இந்த்ராதி தேவர்களாலேயே பூஜிக்கத் தகுந்தவனோ இவ்விதமான மஹான் அப்பொழுது மனுஷ்யர்களால் அர்ச்சிக்கத் தகுந்தவன் என்பதை சொல்லவும் வேண்டுமோ? ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்தவனை அர்ச்சிப்பதாலல்லவா மனிதர்களுக்கு ஐச்வர்யம்

முதலான ஸகல புருஷார்த்தங்களும் ஸித்திக்கிறதென்று ச்ருதிகளாலும் கூறப்படுகிறது.

स्नातं तेन समस्ततीर्थसलिले दत्ता च सर्वावनिः
यज्ञानां च कृतं सहस्रं अखिला देवाश्च संपूजिताः ।
संसाराच्च समुद्धृताः स्वपितरः त्रैलोक्यपूज्योऽप्यसौ
यस्य ब्रह्मविचारणे क्षणमपि स्थैर्यं मनः प्राप्नुयात् ॥

यस्य, எவனுடைய; मनः, மனதானது; क्षणमपि, ஒரு நிமிஷமாவது; ब्रह्मविचारणे, ப்ரஹ்மத்தை விசாரிப்பதில்; स्थैर्यं, ஸ்திரமாயிருப்பதை; प्राप्नुयात्, அடைகிறதோ; तेन, அவனாலே; समस्ततीर्थसलिले, இந்த உலகத்திலுள்ள ஸகலமான புண்ய தீர்த்தங்களிலும்; स्नातं, ஸ்நானம் பண்ணப்பட்டது; सर्वा, ஸமஸ்தமான; अवनिः, பூமியும்; दत्ता च, ஸத்பாத்ரத்தில் தானம் செய்யப்பட்டது; यज्ञानाम्, அச்வமேத யாகங்களுடைய; सहस्रम्, ஆயிரமும்; कृतम्, செய்யப்பட்டது; अखिलाः, ஸமஸ்தமான; देवाश्च, தேவர்களும்; संपूजिताः, நன்றாய் பூஜிக்கப்பட்டார்கள்; स्वपितरश्च, தன் குலத்திலுள்ள பித்ருக்களும்; संसारात्, ஸம்ஸாரமாகிற கடலினின்றும்; समुद्धृताः, நன்றாய் கரையேற்றி விடப்பட்டார்கள்; असौ, இவனும்; त्रैलोक्यपूज्यः, மூன்று லோகத்திலுள்ள ஜனங்களால் பூஜிக்கத் தகுந்தவனாக; (भवति, ஆகிறான்).

அதாவது ஒரு நிமிஷம் ப்ரஹ்மத்தை விசாரிப்பதில் மனதை லயப்படுத்துகிறவனுக்கு ஸகல புண்ய தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணுவதாலுண்டாகும் பலமும், ஸகல பூமண்டலம் தனது வசத்திலிருந்து அதை ஸத்பாத்ரத்தில் தானம் பண்ணுவதாலுண்டாகும் பலமும், ஆயிரம் அச்வமேத யாகத்தைச் செய்வதாலுண்டாகும் பலமும், ஸகலமான தேவதைகளையும் ஒரே ஸமயத்தில் பூஜிப்பதாலுண்டாகும் பலமும், தன் வம்சத்திலுள்ள பித்ருக்களை ஸம்ஸாரமாகிற

ஸமுத்திரத்தினின்றும் கரையேற்றி விடுவதாலுண்டாகும் பலமும், மூன்று லோகத்திலுள்ள ஜனங்களால் தான் பூஜிக்கத் தகுந்தவனாக ஆகிறான் என்ற பெருமையும் ஏற்படுகிற தென்பது சாஸ்த்ரத்தால் தெரிய வருகிறது அல்லவா? ஒரு நிமிஷம் ப்ரஹ்ம விசாரத்தைச் செய்தவனுக்கு இவ்விதம் பலமிருந்தால், அளவற்ற ஆனந்த ஸ்வரூபமான ப்ரஹ்மத்தி னிடத்தில் மனதை லயப்படுத்தி தான் ப்ரஹ்மமாகவே விளங்கும் ப்ரஹ்மானுபவத்தை அடைந்த மஹானுபாவ னுடைய பெருமையை சொல்லி முடியுமோ? அந்த மஹானு பாவன் ப்ரஹ்மமே தான். அவன் லோக பூஜ்யன். லோக குரு. எனக்கு பரமகுரு என்றது என் புத்தி. அது நிச்சயம் தான். அதில் யாதொரு ஸந்தேஹமில்லை. அஹோ பாக்யம் என்று இவ்விதம் ஸ்ரீ சங்கர குருவானவர் தன்னுடைய வேதாந்த ஸித்தாந்தமான ஸ்வானுபவத்தை ப்ரகாசப்படுத்த, சண்டாள வேஷதாரியான பரமசிவனும், சண்டாள வேஷத்தை மறைத்துக் கொண்டு ஸாக்ஷாத் பரமசிவனுடைய வடிவாக வ்ருஷபாரூடராய் விளங்கி வந்தார். அந்த ஸமயத்தி லேயே, பரமசிவன் சண்டாள வேஷதாரியாய் இருந்து வரும் காலத்தில் தொடர்ந்து வந்த நான்கு நாய்களும் நான்கு வேதங்களாக விளங்கி வந்தன. சங்கர குருவும், "அஹோ! பரமசிவனால் இவ்விதம் வஞ்சிக்கப்பட்டேனல்லவா!" என்று மிகவும் வருத்தத்தையடைந்து, "ஆனாலும் யோகிகள் எந்த ஸ்வரூபத்தைக் காண ஸமாதியில் இன்னும் இருந்து வருகிறார்களோ அவ்விதமான பரமசிவனுடைய ஸாக்ஷாத் காரத்தையடையும்படி நேரிட்ட என் பாக்யத்திற்கு ஈடான பாக்யம் உண்டோ? நானே தன்யன். நானே க்ருதார்த்தன்" என்று மனம் மகிழ்ந்து எதிரில் ஆவிர்ப்பவித்து வந்த பரம சிவனை ப்ரதக்ஷிணம் செய்து நமஸ்காரம் பண்ணி அஞ்சலி பந்தத்துடன் கூட ஆனந்த பாஷ்பத்தை ப்ரவஹிக்கும்படி செய்து கொண்டு விநயத்துடன் நின்று வந்தார். *பரமசிவ னும் "சங்கரா! உன் திவ்யானுபாவத்தைப் பரீக்ஷிக்க நான் சண்டாள வேஷதாரியாய் வந்தேன். நீ ஸர்வஜ்ஞன். என்னுடைய*

ப்ரஸாதத்திற்கு நீயே அந்தரங்கமான பாத்ரம். உன் குருவான கோவிந்த பகவத்பாதரால் ஆக்ஞாபிக்கப்பட்ட ப்ரகாரம் ஸர்வக்ஞனான வ்யாஸாசார்யரால் உண்டு பண்ணப் பட்ட ப்ரஹ்ம ஸூத்ரமாகிற உதயகிரியில் நின்றும் உன் பாஷ்யமாகிற ஸூர்யனை உதிக்கும்படிசெய்து லோகத்தி லுள்ள அக்ஞானமாகிற இருட்டை அதின் நின்றும் விலக்கி ஸகல ஜீவகோடிகளை க்ருதார்த்தர்களாகச் செய்வதில் நீயே வல்லவன். ப்ரஹ்ம ஸூத்ரத்தில் வ்யாஸர் எவ்வித அபிப்ராயத்தை வெளியிட்டிருக்கிறாரோ, அவ்வபிப்பிராயம் உன் ஹ்ருதயத்தில்தான் விளங்கும்'' என்று சொல்லி விட்டு நான்கு வேதங்களுடன் பரமசிவன் அந்தர்தானத்தை அடைந்தார். ஸ்ரீ சங்கரகுருவும் இவ்விதம் பரமாச்சர்யத்தைக் கண்டு பரம ஸந்தோஷத்துடன் சிஷ்யகோடிகளோடுகூட கங்கை வந்து சேர்ந்து, மாத்யான்ஹிக ஸ்நானம், அந்த காலத் தில் செய்ய வேண்டிய அனுஷ்டானங்களையும் செய்து விட்டு மறுபடியும் சில தினங்கள் காசி க்ஷேத்ரத்திலே வஸித்து, அங்கேயும் ஜனங்களின் ஸங்கத்தால் ஏற்படும் பாதையைப் பார்த்து, பாஷ்யம் செய்வதற்கு ஏகாந்தமான ஸ்தலம் வேண்டு மென்ற எண்ணத்துடன் ப்ரஹ்மஸூத்ரத்தைச் செய்த மஹானு பாவனான வ்யாஸருடைய ஆச்ரமம் எந்த இடத்திலேயோ அந்தப் புண்யமான பதரிகாச்ரமத்தையே சிஷ்யகோடிகளுடன் அடைந்தார்.

॥ इति शिवम् ॥



## ஸ்ரீ சங்கர குருகுலம் ப்ரசுரங்கள்

சாஸ்த்ர ரத்னாகரம்

ப்ரஹ்மஸ்ரீ தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள் அவர்களால் எழுதப்பட்டவை தற்போது விற்பனைக்கு உள்ளவைகள்

1. ஆதித்ய ஹ்ருதயம்
2. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்
3. ஸௌந்தர்யலஹரீ
4. கனகதாரா ஸ்தோத்ரம்
5. சங்கர விஜயம்